# லலிதாவின் ஆயிரம் நாமங்கள்
## தமிழ் இசை மாலை




இயற்றியவர் : லலிதா தேவியின் அன்பர்

**முனைவர் (திருமதி) இரா. அருணா ஶ்ரீ**

# லலிதாவின் ஆயிரம் நாமங்கள்

## தமிழ் இசை மாலை

(ஸமஸ்க்ருதத்தில் உள்ள லலிதா ஸஹஸ்ரநாமத்தினை

அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டது.)



இயற்றியவர்

லலிதா தேவியின் அன்பர்

**முனைவர் (திருமதி) இரா. அருணா ஸ்ரீ**

Book Name : LALITHAAVIN AAYIRAM NAAMANGAL- Tamizh Isai Maalai

Language : Tamil



1st Edition : Mar2024

Pages : 64

Price : Rs. 140

ISBN No. : 978-93-340-2470-8

Book Size : Demi

Paper : Inner 80gsm Maplitho, Cover 250gsm Art Paper

Copies : 500

Published by : Dr R Aruna Sri

Marketed by : Sri Matha Creations,53/3, Lakshmipathy Street, Naveen Nagar, Vengadamangalam, Tambaram 600129

Email : braamic@gmail.com

For orders : 9013905992 (only whatsapp)

NAMAMADHURAM



For reviews



Youtube version

# முகவுரை

**Dr. M.A. Bhageerathi,** Date: Mon, Nov 13, 2023, 10:52

தமிழிசை முனைவர்

ஸ்ரீ மாத்ரே நம:

அம்பாளின் அருளால் முனைவர் திருமதி அருணா ஸ்ரீ அவர்கள் லலிதா ஸஹஸ்ரநாமத்தினை அழகு தமிழில் சந்தங்களோடு இயற்றி இசை அமைத்துள்ளார்.இதனைத் தமிழ் கூறும் நல்லுலகிற்கு 'லலிதாவின் ஆயிரம் நாமங்கள் – தமிழ் இசை மாலை', என்ற தலைப்பில் புத்தகமாக வழங்கி உள்ளார். பல்வேறு ராகங்களைப் பயன் படுத்தி இசையூட்டியதால் இந்நூல் ஒரு சிறந்த இசை நூலாகவும் திகழ்கிறது. இப்படிப்பட்ட சிறந்த நூல் நிச்சயமாக அனைத்து அம்பாள் உபாசகர்களிடமும் இருக்க வேண்டும். இந்நூலாசிரியர் மிகுந்த கவனத்துடன் லலிதா சகஸ்ரநாமத்தை மொழிபெயர்ப்பு செய்துள்ளார். லலிதா சகஸ்ரநாமம் 'சிந்துராருண விக்ரஹாம்' என்று துவங்கும். இவர் 'சிந்தூரம் போல் சிவந்த மென்மேனியும்' என்று அழகாக அதேபோல் தியான ஸ்லோகத்தை துவக்குகிறார். 'சொல்லொணாப் பேரழகி' என்று அம்பிகையை குறிப்பிடுகிறார். அம்பிகையை வணங்கினால் அனைத்து சித்திகளும் கிடைக்கும் என்பதனை 'சூழ்ந்தேத்தும் அணி மாதி சித்திக்குழாம்' என்று குறிப்பிடுகின்றார். ஆயிரம் நாமங்களும் ஆயிரம் செய்யுள்களாக மிளிர்ந்துள்ளன. மேக்மல்ஹார், வர்ணரூபிணி, ஜோதிஸ்வரூபிணி போன்ற அறிய ராகங்களை பயன்படுத்தினாலும் வசந்தா, பெஹாக், ஸ்ரீராகம் போன்ற பிரபல ராகங்களையும் பயன்படுத்தி உள்ளது சிறப்பிற்குரியது.பிற்காலத்தில் சக்தி உபாசனை செய்யக்கூடிய அன்பர்கள் பலர் சேர்ந்து உருவாக்கிய நூற் களஞ்சியங்கள் பலவும் உண்டு. ஆனால் லலிதா ஸஹஸ்ரநாம் எப்படி மந்திரமாலையாக, எல்லோரும் சொல்லும் வண்ணம் உள்ளதோ அதே போல் சந்த முறையில் அமைந்த மந்திரமாலையாக ஸம்ஸ்க்ருதம் தவிர வேறு எந்த மொழியிலும் எழுதப்படவில்லை. முதன்முதலாக தமிழில், இந்த நூலில் தான் அவ்வாறு மந்திர மாலையாக சந்த அமைப்பில் செய்யுள்கள் எழுதப்பட்டுள்ளன. இத்தகைய அரிய பொக்கிஷத்தை அம்பிகையின் அருளால் அனைவரும் உபாஸனைக்கு பயன்படுத்தினால் அம்பாளின் அருள் சித்திக்கும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இந்நூலிற்கு முகவுரை எழுதுவதற்கு என்னிடம் அவர் கேட்டதும் அம்பாளின் அனுக்கிரகம்தான் காரணமாக இருக்கிறது. வாய்ப்பினை நல்கியமைக்கு நன்றி. ஸ்ரீ மாத்ரே நமஹ:

**முனைவர். எம் ஏ பாகீரதி**

தமிழிசை முனைவர்

முன்னாள் துணைத் தலைவர்

இசைத்துறை இராணிமேரி கல்லூரி, சென்னை

# நூலாசிரியர் அறிமுக உரை

ॐ
श्री माता रक्षतु माम् चराचरमयी।
श्री मातरं नमस्ये सदा।
श्री मात्रा सुरक्षितोहं असकृत्।
श्री मात्रे दत्तं मनः।
श्री मातुः समुद्भवं जगत्तिदं।
श्रीमातुः दासोस्म्यहं।
श्री मातरि भक्तिः अचञ्चलास्तु भवतु।
श्री मातः माम् उद्धर ।।

ஆங்கில வருடம் 2020, கோவிட் மகாமாரி என்கிற பெருந்தொற்று நோய் உலகை ஒடுக்கிட, மக்கள் பீதியால் வீட்டில் அடைந்து இருக்க நேர்ந்த சமயம். அந்த நேரத்தில் யாரும் வெளியில் போகக்கூடாது. எப்பொழுதும் சுறுசுறுப்பாக ஏதோ ஒரு இசை நிகழ்ச்சி இல்லை டிவியில் ஒரு பதிவு என்று அலைந்து திரிந்து கொண்டிருந்த எனக்கு மிகவும் வெறுமையான ஒரு மனநிலை உண்டானது. வாழ்க்கையில் நமக்கு அடுத்தது என்ன செய்வது என்று தெரியாத ஒரு வெறுமையான மனநிலையை விவரிப்பது கடினம். அது அனுபவித்தால் தான் புரியும். எதை தொட்டாலும் அதனால் நோய் வந்துவிடும் என்கிற ஒரு மனப் பிராந்தி என்னை ஆட்கொண்டது.

சதா அம்பாளுடைய நாமத்தை ஜபித்துக்கொண்டு என் மனக்கண் முன்னால் ஏற்படக்கூடிய அந்த வெறுமை நிலையுடன் நான் போரிட்டுக் கொண்டிருக்கும் பொழுது, ஒரு பெண்மணி எனக்கு போன் செய்கிறார். லலிதா ஸஹஸ்ரநாமத்தினை தமிழில் எழுதி உள்ளதாகவும் அதை இசை அமைத்துக் கொடுக்குமாறும் கேட்டுக் கொள்கின்றார். எனக்கும் எந்த ஒரு குறிக்கோளும் இல்லாத வெறுமை நிலையை கடப்பதற்கு இது ஒரு நல்ல உபாயம் என்று தோன்றியது. இதற்கு முன்னோடியாக அந்த லலிதா ஸஹஸ்ரநாமத்தினை நான் நன்றாகப் படித்து அதனுடைய பொருளை உணர்ந்து கொண்டு அதற்கு இசை அமைக்க வேண்டி இருந்தது.

அப்படி நான் பெரியவர்களுடைய புத்தகங்களை படித்து அந்த ஒவ்வொரு நாமத்திற்கும் உள்ள பொருளினை அறிய முற்படும் பொழுது, அந்தப் பெண்மணி எழுதிய பல நாமங்களில் பிழைகள் இருப்பது எனக்கு புரிந்தது. இது பற்றி நான் அவரிடம் கேட்ட பொழுது அவர் வலைதளங்களில் உள்ள தகவலை

அடிப்படையாகக் கொண்டு எழுதியதாக் கூறினார். அதிகப்படியான திருத்தம் செய்வது சரியில்லை என்பதால் அந்த வேலையை நிறுத்திவிட்டேன். அந்த பெண்மணியுடைய படைப்பினை நான் திருத்த முடியாது இனிமேல் என்று திருப்பி அளித்து விட்டாலும் ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்தவுடன் என் மனதில் பிரவாகமாக அடுத்த வரிகள் பொங்கி வர ஆரம்பித்தன.

லலிதா ஸஹஸ்ரநாமம் என்பது ஷாக்த்தம் என்ற வழியில் அம்பாளை வழிபடும் ஆன்மீக அன்பர்கள் மத்தியில் மிகுந்த உயர்ந்த ஒரு இடத்தில் வைக்கப்பட்டுள்ள மந்திர மாலை ஆகும். இந்த மந்திர மாலையை பல வருடங்களாக ரகசியமாகவே வைத்திருந்தார்கள். பின்னர் ஒரு காலத்தில் அம்பாளுடைய சங்கல்பத்தினால் சில பெரியவர்கள் மூலமாகவே அது வெளிப்பட்டு சாதாரண ஜனங்களுக்கும் கிடைக்குமாறு ஆனது. ஆனாலும் எல்லோருக்கும் புரியும் வகையில் இதற்கு பொருள் எழுத வேண்டும் என்று ஆதி சங்கராச்சாரியார் முயற்சி செய்தும் கூட அம்பாளின் உத்தரவு கிடைக்காததின் பேரில் அறிஞர்களே சர்ச்சை செய்யக்கூடிய சில நாமங்களின் பொருளை ஆதாரமாக வைத்து அவற்றை விளக்கும் வகையில் ஸௌந்தர்யலஹரி எழுதினார். பின்வரும் காலத்தில் பாஸ்கர ராயர் எழுதியது ஸௌந்தர்யலஹரியை ஆதாரமாக வைத்து எழுதப்பட்ட பாஷ்யம் என்று கூறக்கூடிய வகையில் அமைந்த முதல் நூல். இதனை அடிப்படையாக வைத்து பிற்காலத்தில் சக்தி உபாசனை செய்யக்கூடிய அன்பர்கள் பலர் சேர்ந்து உருவாக்கிய நூற் களஞ்சியங்கள் பலவும் உண்டு.

ஆனால் எப்படி மந்திரமாலையாக எல்லோரும் சொல்லும் வண்ணம் உள்ளதோ அதே முறையில் சந்த முறையில் அமைந்த மந்திரமாலையாக ஸம்ஸ்க்ருதம் தவிர வேறு எந்த மொழியிலும் எழுதப்படவில்லை. முதன்முதலாக தமிழில், இந்த நூலில் தான் அவ்வாறு மந்திர மாலையாக சந்த அமைப்பில் எழுதப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட ஒரு தேவையை நோக்கி என்னுடைய கவனத்தை திரும்பிய அந்தப் பெண்மணிக்கு நான் மிகவும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். பக்தி என்ற நல்ல நோக்கத்தோடு அவர் செய்ததினால் அவருடைய அந்த முயற்சி என்னுடைய கவனத்தை இந்த வேலையின் பக்கம் திருப்பியது என்று தான் கொள்ள வேண்டும். ஸமஸ்கிருதம் சரியாக உச்சரிக்க முடியாதவர்களும் அம்பாளுடைய ஆயிரம் நாமங்களைக் கூறும் அந்த அனுபவத்தினை பெற வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது.

இந்த வேலையை நான் மார்ச் 2020ல் தொடங்கி 2023 செப்டம்பர் மாதம் முடித்தேன். அம்பாளுடைய இந்த ஆயிரம் நாமங்கள் தேவர்களெல்லாம் குழுமிய சபையில் முதலில் வாக் தேவதைகளால் உரைக்கப்பட்டவை. அதை

உள்வாங்கிய ஹயக்ரீவர் அம்பாளுடைய உபாசனையில் லயித்து, இந்த லலிதா ஸஹஸ்ர நாமத்தினை தன்னிடம் வந்து மிகவும் வேண்டி கேட்பவருக்கு மட்டும் கொடுப்பவர் ஆனார். அகத்திய முனி அவருடைய மனைவியான லோப முத்திரையுடன் அம்பாளின் வழிபாட்டில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார். அவர் வந்து ஹயக்ரீவரிடம் அம்பாளை பற்றிக் கூறுமாறு கேட்டு, அறிந்து லலிதா ஸஹஸ்ரநாமத்தையும் கற்றுக் கொண்டார். அகத்தியர் வழியில் வந்த சீடர்கள் யாரெல்லாம் இந்த உபாசனை மார்க்கத்தை விரும்பி கேட்டார்களோ அவர்களுக்கு அகத்தியர் லலிதா ஸஹஸ்ரநாமத்தினை பாடம் செய்து வைத்தார்.

பல காலங்களாக எழுதப்படாமலேயே நூல் வடிவம் ஏற்படாமலேயே குரு சிஷ்ய பரம்பரையில் மந்திரமாலையாக உபதேசம் செய்யப்பட்ட இந்த அரிய பொக்கிஷம் ஆன லலிதா ஸஹஸ்ரநாமம் ஹயக்ரீவர், அகத்தியர், ஆதிசங்கரர், பாஸ்கர ராயர் இவர்களை தொடர்ந்து பின்னும் எண்ணற்ற உபாசகர்கள் மூலம் இன்று நமக்கு கிட்டியுள்ளது. இந்த லலிதா ஸஹஸ்ரநாமத்தினை பலரும் சொல்வதற்கு ஆவலாக இருக்கிறார்கள். ஆனால் அடிப்படையில் சிறு வயது முதலே ஸம்ஸ்க்ருத மொழியின் பரிச்சயம் இல்லாத காரணத்தால் பலர் பிழையாக உச்சரிக்கிறார்கள். சில பேர் தான் பிழையாக உச்சரிக்கின்றோம் என்பதை அறிந்து இந்த மந்திரங்களை நம்மால் கூற முடியவில்லை என்றும் வருந்துகிறார்கள். அவர்களுடைய வருத்தத்தை தீர்ப்பது தான் அம்பாளின் சங்கல்பம் போலும், நான் இந்தப் பணியினை செய்வதற்கு கருவியானேன். இந்த படைப்பு அனைவருக்கும் ஆனந்தத்தை அளிக்கும் என்று நம்புகிறேன்.

இந்த நூலினை மீண்டும் பிரசுரிக்க வேண்டுமாகிலும் என்னுடைய அனுமதியை பெற வேண்டுகிறேன். தற்பொழுது நாங்கள் வெளியிட்டுள்ள இந்த பிரசுரத்தினை நீங்கள் பெற வேண்டுமாகில் என்னைத் தொடர்பு கொள்ளலாம். இந்த நூலினை மொத்தமாக அச்சடித்து திருமணம், அறுபதாம் கல்யாணம், நவராத்திரி, சுமங்கலி பூஜை போன்ற விழாக்களில் அன்னையின் அன்பர்களுக்கும் சுற்றாருக்கும் அன்பளிப்பாக அளித்து அம்பாளுடைய நாமத்தை மேலும்-மேலும் நிறைய அன்பர்கள் கூறும் பாக்கியத்தினை அனைவருடனும் பகிர்ந்து கொள்ள வேண்டுகிறேன். இந்த படைப்பின் இசை வடிவம் என்னால் பாடப்பட்டு யூட்யூபில் உள்ள நாமமதுரம் சேனலில் பகிரப்பட்டுள்ளது. கீழேயுள்ள QR code மூலம் பார்த்தது, கேட்டு, படித்து, பகிர வேண்டுகிறேன். இந்நாலினைப் பெற braamic@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரியில் தகவல் அனுப்பவும்.

**நன்றி!**



# குரு அருளாசி

முனைவர் திருமதி அருணா ஸ்ரீ , அம்பாளிடம் அதீத ப்ரேமையும் பக்தியும் உடையவர். ஆன்மீகத்திலும் இசையிலும் தேர்ச்சி பெற்றவர். கோபுரம் தொலைக்காட்சியில் சௌந்தர்ய லஹரிக்கு விளக்க உரை அளித்ததின் மூலம் பக்தர்களுக்கு பரிச்சயம் ஆனவர்.

எழில் கொஞ்சும் இனிய தமிழில், சந்த வடிவில் படைத்து, லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு பாரம்பரிய இசையில், அனேக அபூர்வ ராகங்களில் கருத்துகள் மாறாமல், பிரமிப்பூட்டும் வகையில், இசை அமைத்துள்ளார் என்பது மிகவும் பெருமைக்குரிய விஷயம் ஆகும்.

என்றும் நிலைத்திருக்கும் வகையில் இந்த ஸஹஸ்ரநாமம் அமைந்துள்ளது. அம்பாளின் அருளால் மட்டுமே நடந்திருக்கும் விஷயம் இது. அன்னாரின் சிறந்த பணி எல்லா துறைகளிலும் தொடரவும், என்றென்றும் அம்பாளின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்கு பாத்திரமாகவும் என் மனமார்ந்த ஆசிகள்.

**திருமதி பாலாம்பாள் உமாஷங்கர்**
லலிதா தேவி உபாஸகர்

---

## ஸ்ரீமதி பாலாம்பாள் அவர்கள் தீக்ஷா நாமம்

டங்கார ரூபிணி சமேத கௌளஸ்வரானந்த நாத

**குருபரம்பரை**

குரு - காமேஸ்வரி அம்பா சமேத அமிர்தாநந்த நாத

பரமகுரு-ராமாநந்த நாத

# நன்றியுரை

மனம் , வாக்கு, செயல் இம்மூன்றும் இணைந்தால் தான் பூஜையினால் கிட்டக்கூடிய நிஜமான பலன் கிட்டும். தமிழில் லலிதா ஸஹஸ்ரநாமத்தினை கூறும் பொழுது, நாமங்களின் பொருள் தெரிவதால் அந்த காட்சி நம் கண் முன் விரியும். இவ்வாறு சித்தம் ஒருமித்த நிலையை நீண்ட நாள் சாதனை செய்யும் பொழுது ஸாயுஜ்யம் என்னும் நிலை கிட்டும். இந்த மாபெரும் சாதனையை அனைவருமே செய்ய வேண்டும் என்ற இறை ஆணையை நிறைவேற்ற எமக்குத் துணையாக எம்முடன் பயணித்த அன்புள்ளங்களின் விவரம் வருமாறு.

இந்த படைப்பினுக்கு தட்டச்சு வடிவம் கொடுத்த இறை அன்பர் **திரு. எஸ் பாலசுப்ரமணியன்** அவர்களுக்கு அன்னையின் பேரருள் கிட்டட்டும். தமிழிலும் இசையிலும் ஆன்மீகத்திலும் சிறந்த, பரூர் இசை பரம்பரையில் வந்த, **கானகலாவிபஞ்சி முனைவர் (திருமதி) M.A. பாகீரதி** அவர்கள் முகவுரை அளித்தது எமது நற்பேறு.

எமக்கு மந்திர ஜபம் அளித்த குரு **திருமதி. பாலாம்பாள் உமாஷங்கர்** அவர்களுக்கு, இந்நூலுக்கு ஆசியுரை வழங்கியமைக்கு, என் உளம் கனிந்த நன்றிகள்.

ரோடரி க்ளப் சென்னையை சேர்ந்த **திரு. சங்கர் துரைஸ்வாமி** மற்றும் **திரு. G. வராக மூர்த்தி** ஆகியோர் இந்நூலினை வெளிக்கொணர நல்ல வழிகாட்டுதல் தந்து அன்னையின் அருட்பேரினுக்கு பாத்திரமானவர்கள்.

இந்நூலினை அச்சு வடிவத்தில் வெளிக்கொணரத் தேவையான தொழில் நுட்ப சேவையினைத் தந்த ராஜம் டிஜிட்டல் ஆஃப்செட் ப்ரிண்ட்ஸ் உரிமையாளரான **திரு.க.நா.விஸ்வகுமார்** அவர்களுக்கும், நூலினை உள்ளன்போடு வடிவமைத்துக்கொடுத்த **திரு.கி.விஜயானந்தன்** அவர்களுக்கும் அன்னையின் அருளாசி என்றும் உரித்தாகுக.

மேலும் பல்வேறு வழிகளில் எமக்கு ஊக்கம் தந்து உதவிய தேவி உபாஸகர்கள் அனைவருக்கும் எமது உள்ளார்ந்த நன்றிகள்.

இசை அறிவை எமக்கு ஊட்டி வளர்த்த என் அன்னை **திருமதி. அனுராதாவுக்கும்**, உலக அறிவையும், தனித்து செயல்படும் தைரியத்தையும் எனக்கு போதித்த, காலம் சென்ற என் தந்தை

**திரு. ராஜ்மோகன்** (Retd. From THE HINDU), அவர்களுக்கும் என் நேயம் கலந்த நன்றிகள்.

என் தமிழ் ஆர்வத்தினை ஊக்குவித்து என்னை மேம்படுத்திய அரசு பள்ளி தமிழ் ஆசிரியைகள் **திருமதி ஜானகி** மற்றும் **செல்வி புஷ்பா** அவர்களை இந்நிலையில் நினைவு கூர்வது எம் கடமை.

எனது இசை ஆசான்கள் ஆகிய என் தாய் வழி பாட்டி (காலம் சென்ற) திருமதி **ஸரோஜா நாராயணன்**, (காலம் சென்ற) ஹைதிராபாத் திரு **சேஷாசாரி**, ஆக்ரா **திரு தேவாஷீஷ் காங்குலி** மற்றும் பனாரஸ் **திரு நரேந்திர ஜா** அவர்களுடைய அறிவும் திறனும் இப்பணியில் ஒளிந்து உட்பொதிந்து இருப்பது மறுக்கமுடியாத உண்மை. அவர்களுக்கு என் பணிவான நன்றிகள்.

எம்முடைய இறைப்பணிக்கு உறுதுணையாக இருந்து ஊக்குவிக்கும் என் வாழ்க்கைத் துணைவரான **க்ரூப் கேப்டன் V. கணேஷ் நாராயணன்**, மற்றும் அன்னையின் அருட்பேறாக எம் வாழ்வில் மலர்ந்து, நோய் தீர்க்கும் மருத்துவராகப் பணிபுரியும் பேறு பெற்ற **எம் மகள் Dr. நிரஞ்ஜனாவுக்கும்**, அன்பின் ஆற்றலை எப்பொழுதும் எமக்கு உணர்த்திய வண்ணம் எம்முடன் இப்பிறவியில் பயணிக்கும் என் செல்லப் ப்ராணிகளான விச்சு, குப்பு, மேக்ஸ், குக்கலா, குக்கி, பூமி, ரூபி, லாகி ஆகியோருக்கும் என் அன்பு கலந்த நன்றிகள்.

**முனைவர் (திருமதி) இரா. அருணா ஶ்ரீ**

---

## சிறப்புக் குறிப்பு

அம்பாளுடைய ஸங்கல்பத்தினால் நானும் ஒரு கருவியாக, உருவான இந்த அருள் மாலையைப் படைப்பதில் எனக்கு தகவல் களஞ்சியமாக விளங்கிய பல துணை நுல்களுக்குள் நான் சிறப்பாகக் குறிப்பிட விரும்புவது. (ஸார்) ஶ்ரீ சிதானந்தநாதரின் குருபரம்பரையில் வந்த ஞான பாஸ்கரஸங்கத்தினைச் சேர்ந்த திரு **S. கணபதி சுப்ரமணியன்** மற்றும் திரு **M. சுந்தரராமன்** அவர்கள் மூலம் எழுதப்பட்டு 1999ல் வெளியிடப்பட்ட, தமிழ் உரையுடன் கூடிய ஶ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் ஆகும்.

அந்த சங்கதுடன் இணைந்துள்ள அன்பர்கள் அனைவருக்கும் எனது நன்றிகள்!

ஓம் ஸ்ரீ ஸாயிராம்

ओम् गम गणपतये नम:
ओम् श्री विध्यादायिनी सरस्वत्ये नम:
ओम् श्रीं ह्रीं कलीं ऐं
श्री ललिता त्रिपुरसुंदर्यै नम:

श्री ललिता सहस्रनाम स्तोत्रम (तमिल)
शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम ।
प्रसन्न वंदनम् ध्याये त्सर्वविघ्नोपशान्तये।।

# லலிதாவின் ஆயிரம் நாமங்கள்

## தமிழ் இசை மாலை

இயற்றியவர்
லலிதா தேவியின் அன்பர்
**முனைவர் (திருமதி) இரா. அருணா ஸ்ரீ**

## விநாயகர் துதி

*அம்பிகை மைந்தா ஆதி முதல்வா
அருந்தமிழ் செல்வன் முருகனின் மூத்தவா
தும்பிக்கையானே துணை புரிந்தருள்வாய்
மங்களம் எல்லாம் எங்களுக்கருள்வாய்*

### த்யானம் 1

சிந்தூரம் போல் சிவந்த மென்மேனியும்
சீறெழில் நெற்றியில் செறிந்த முக்கண்ணும்
சந்திரப் பிறையொளிர் மாணிக்க மகுடமும்
புன்னகை வதனமும் பெருத்த வனமுலையும்

செங்குவளை யேந்திய செவ்விதழ்க் கரங்களும்
சிறந்த இரத்தினமொளிர் அளிமதுக்கிண்ணமும்
செம்மணிக் கலனுறை செங்கமலப் பாதமும்
சேர்ந்தமைந் துலகாளும் அம்பிகையை தியானிப்போம்

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம்

### த்யானம் 2

உதித்தெழும் அருணனாய் ஒளிரும் செம்மேனியும்
அலையலையெனக் கருணை பொழியும் விழிவேலையும்
பூங்கணையும் கரும்புவில்லும் பொருந்திய கரங்களும்
பொல்லாதவரை அடக்கும் பாஶ அங்குஶமும்

சூழ்ந்தேத்தும் அணிமாதி சித்திக் குழாமும்
சுகம்தரும் நாமங்கள் சொல்லிப் பணிந்திடும்
சொல்லொணாப் பேரழகியாய்த் திகழும் பவானியை
உள்ளொளிர் “அஹம்” எனும் தத்துவமாய் பாவிக்கிறேன்

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம்

### த்யானம் 3

தாமரை மீதுறைபவளின் தண்மலர் முகமும்
தளிராவிந்தமென நீண்ட நயனங்களும்
பொன்னெழில் ஆடையும் பொன்னொளிர் மேனியும்
பொற்றாமரைக் கையும் பொலியும் அங்கங்களும்

அணியலங்காரமும் அபயகரமும் கொண்டு
அண்டியவர்க்கிரங்கி அருளும் பவானியாகி
ஸ்ரீவித்யா ரூபியாய் ஶாந்தத் திருவுருவாய்
தேவாதி தேவர் தொழும் செல்வத்தாயைச் சேவிப்போம்

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம்

**த்யானம் 4**

செஞ்சாந்துப் பூச்சழகும் நறுமணக் கஸ்தூரிப் பொட்டும்
புன்னகைக்கும் விழியழகும் பூவம்பும் கரும்பு வில்லும்
அன்பும் ஆளுமையுமென அமைந்த பாஶ அங்குஶமும்
அனைவரையும் ஈர்க்கும் அளவிலாப் பேரழகும்

செந்நிற ஆடையணி சிவந்த மேனியும்
செம்மலர் மாலையும் சிறந்த அணிகலன்களும்
செம்பருத்தி நிறமென சிவந்த காந்தியும்
சேர்ந்தொளிர் தேவியை சிரம்தாழ்த்திச் சிந்திப்போம்

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம்

## லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்
## லலிதாவின் பாதமலர் பணிந்தேத்துவோம்

அனைவரின் அன்னையாய் அருள்மழை பொழிபவளே
அனைத்தையும் ஆளும் அருட்பேரன்னையே
சிங்க ஆசனத்தமர் செல்வப்பேரரசியே -
- ஸ்ரீ மாதா என்னும் சிறப்புக்குரியவளே (3)

உள்ளொளிர் ஞானத்தில் உதித்த ஒளிப்பிழம்பே
உற்று தேவர்கணம் காக்க வந்த உமையே
உதிக்கும் அருணன் போல் ஒளிர்சிவப்பு நிறத்தினளே
எதிர்த்தவரை வதைத்தெழும் கரங்கள் நான்குடையவளே (7)

அன்பினால் ஆண்டடக்கும் பாஶத்தைத் தரித்தவளே
அரக்ககுணமதை அழிக்கும் அங்குஶம் கைக்கொண்டவளே
உறுதியுடன் கனிவும் ஒருசேர்ந்த குணத்துடனே
ஓங்கிய கரும்பினை வில்லாக்கிக் கொண்டவளே (10)

செயல்நிலை மாறாத செவ்விய மனத்துடனே
செழித்தோங்கு மலர்செண் டம்பினைக் கைக்கொண்டவளே
ஐம்பூதங்களையும் அம்புகளாய்த் தரித்தவளே (11)
அழகொளி வெள்ளமாகி அணைந்துலகம் சிவந்தவளே (12)

செண்பகாஶோக புன்னாகத்திற்கும் மணந்தரும் குழலினளே
சிறந்தொளிரும் இரத்தின மகுடத்தினைத் தரித்தவளே
எட்டாம் பிறையென எழில் கொஞ்சும் நெற்றியளே
எழில்முழு மதிமேல் களங்கம் போல் கஸ்தூரிப் பொட்டினளே (16)

மதனகமாம் திருமுகத்தில் தோரணப் புருவத்தினளே
மடைதிறந்த வெள்ளத்தில் துள்ளும் கயற்கண்ணியளே
தளிர் ஶெண்பக புஷ்பத்தினை ஒத்த இளம் நாசியளே
தாரகையோ எனத்தோன்ற ஒளிரும் மூக்கணியினளே (20)

கதிரவன் மதி மண்டலமும் குண்டலமாய் காதில் ஒளிர
கன்னங்கள் பதுமராகக் கண்ணாடியாய் எதிரொளிர
கொடிப்பவளம் கொவ்வை இளம் சிவப்பினைப்போல்
இதழொளிர
கொடியிடையாள் திரிபுரையின் வடிவழகுக் கீடில்லையே (24)

சுத்தவித்தை முளைகளெனத் தோன்றும் பல்வரிசையளே
சுகந்த கற்பூர தாம்பூலம் மணம் கமழும் திசையினளே
ஶ்ருதியுடன் ஸரஸ்வதி புனையும் இசையினும்
இன்னுரையினளே
சொக்கனும் சொக்கிமூழ்கும் சுந்தரப் புன்னகையினளே (28)

கற்பனைக்கு எட்டாத கவின் முகவாய் உடையவளே
காமேசஶனின் கையினால் கழுத்தில் தாலி அணிந்தவளே
கனகாங்கதகேயூர அணிகலனொளிர் தோளினளே
கழுத்தினிலே முத்தணி இரத்தினப்பதக்கம் அணிந்தவளே (32)

ஈசனின் ஈடிணையற்ற ஆசைக்கீன்ற கொங்கையளே
இடுபாத்தியின் படர்கொடிபோலெழும் ரோம வரிசையளே
இளம்கொடியில் அலர்மொட்டாய் இருநகிலும் குவிந்திலங்க
இனிபாரம் தாங்காதென இளகும் மெல்லிடையினளே (36)

இளவெயில் நிறஆடையினை இனிதுடுத்தி மிளிர்பவளே
இடையில் மூவணிக்காப்பு இழைந்திலங்கும் இமையவளே
இடுப்பினில் அணி மணிமேகலை கிண்கிணியென

ஒலித்திடவே
ஈசன் மட்டுமேயறிய இலங்குமிளம் தொடையினளே (39)

மாணிக்க மகுடம் போன்று ஒளிரும் முழந்தாளினளே
மாதவசீலர் மனதில் மறையாய் உறையும் திருவே
மாதவனின் ஸோதரியே மணியே மணியின் ஒளியே
மாதாஉன் அழகினுக்கு உலகில் ஈடில்லையே (40)

**வாஸந்தி 41–60 (ஸ ரி1 க2 ப த1 ஸ்/ ஸ் த1 ப க2 ரி1 ஸ)**

காமனம்பு கலன்போலும் கவின்மிகு கீழ்க்கால்களே - அக்
கலனுறை அம்பின் நுணி போல் ஒளிரும் நகங்களே
ஆமையின் முதுகினை ஒத்த அழகான குதிகால்களே
அறியாமையெனும் இருளை அகற்றிட ஒளிரும் நகமே (44)

தாமரையின் மென்னியலே தோற்றிடும் தாளிணையே
கோமேதகப் பரல் தண்டையில் கோமளமாய் சிணுங்கிடுமே
அன்னப்பேடதையும் விஞ்சிடும் அதிநளின நடையே
எண்ணத்தில் அடங்காப் பேரெழில் கொஞ்சும் உயர்வே (48)

செந்நிறப் பொன் விடியலினும் செழிப்பான உருவமே
இம்மையும் மறுமையும் வந்து எமைக் காத்திடும் பாதமே
திருவாபரணங்கள் பல அணிந்த திருவழகே
தீர்த்திட ஈசன் தாபம் தலைவன் மடி அமர்ந்தவளே (52)

சிவனுருவில் தான் சேர்ந்து ஶிவஶக்தி ஆனவளே
அவனென்றும் அவளை அன்புடன் போற்றிப் பணிவானே
மகாமேரு சிகரத்தில் மந்தஹாஸத் துடனமர்ந்து
நிகரில்லாத் திருநகரில் நிலைபெற்றெமை யாள்பவளே (56)

பாசமணி இல்லத்தில் பாங்காய் குடிகொண்டவளே
ஆசனமாய் ஐம்பிரமம் ஆங்கேயிட்டமர்ந்தவளே
வாசமிகு செந்தாமரை அடவியினுள் வசிப்பவளே
வனப்புடை கடம்பவனமதில் வாழும் காமாட்சியே (60)

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**
**லலிதாவின் பாதமலர் பணிந்தேத்துவோம்**

**ஜோதிஸ்வரூபினி 61–80**

அமிர்தக்கடலின் ஆழத்தின் நடுவில் உறைபவளே
நிமிர்ந்த பார்வையில் நிம்மதியைத் தந்தருள்பவளே
மனிதர்கள் விரும்பும் வரங்களை மாறாது அருள்பவளே
முனிவரும் தேவரும் முதற்கண் வழிபடு முக்குணமே (64)

பண்டாசுரனை அழித்திட ஶக்தி சேனைகள் சூழ வந்தவளே
சம்பத்கரியின் களிறுகளால் சூழ்ந்த படையைக்
கொண்டவளே
அஷ்வாரூடா தேவியின் கோடி குதிரைகள் சூழ வந்தவளே
ஆடிவரும் ஸ்ரீ சக்ரமெனும் தேரில் ஆயுதங்கள் பல
கொண்டவளே (68)

இசைத்தெய்வமான மந்த்ரிணி கேய சக்ரதேரில் வந்துனைப்
பணிந்தனளே
கிரிசக்ரதேரில் அமர்ந்த தண்டினி தேவியும் உன்னைப்
பணிந்தனளே
ஜ்வாலாமாலினி அமைத்த அக்னி கோட்டையின் நடுவில்
அமர்ந்தவளே
பண்டனை அழித்திடும் சக்தி சேனை வீரத்தைக் கண்டு
களித்தவளே (72)

நித்ய தேவதைகள் இரத்தம்வரத்தாக்கி அடிப்பதைக் கண்டு
இரசிப்பவளே
பண்டனின் மகன்களை வதைத்த பாலா தேவியால் மிக
மகிழ்ந்தவளே
விஷங்களை அழித்த வீரமந்த்ரிணி தேவியால் பெருமை
கொண்டவளே
விஷுக்ரன் உயிரை மாய்த்த வாராஹி தேவியைக் கண்டு
மகிழ்ந்தவளே (76)

காமேஷ்வரனைக் காதலுடன் நோக்கி கணபதியை
ஈன்றவளே
தாமதமின்றி தடையந்திரமதை கணபதி உடைக்க
மகிழ்ந்தவளே

பண்டனின் ஆயுதப்படையைக் குலைக்கும் அம்புமாரியைப்
பொழிபவளே
பத்து அவதாரம் நாரணனை நகநுனியில் எடுக்க
வைத்தவளே (80)

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**
**லலிதாவின் பாதமலர் பணிந்தேத்துவோம்**

**கலாவதி 81–100 (ஸ க2 ப த2 நி த2 ஸ்/ ஸ் நி த ப க ப க ஸா)**

மகாபாசுபதக் கணையால் அசுரப்படையை அழித்தவளே
மகேஸ்வரனின் காமேஷ்வரக் கணையால் பண்டாசுரனின்
– தலைநகராம் சூனியகம் எனும் நகரை எரித்தவளே
பிரமன் அரி இந்திரனும் தேவரும் தொழும் தேவியே
அரன் எரித்த மன்மதனுக் கருமருந்தாய் ஆனவளே (84)

சீர்மிகு வாக்பவ கூடம் முகத்தாமரை ஆனவளே
கழுத்துமுதல் இடைவரை காமகூடம் அமைந்தவளே
கவின்மிகு இடைமுதல் கீழாய் சக்திபீடம் கொண்டவளே
கடைவழிக்குச் சூத்திரமாம் மூலமந்த்ர உருவினளே (88)

மூலமந்த்ர முக்கூடங்கள் முழுவுடலாய்க் கொண்டவளே
குலாம்ருதமாம் குண்டலினி சக்தியினில் லயிப்பவளே
குலாமுத மறைபொருளை குஹ்யமாகக் காப்பவளே
குலமகளாய்த் தான் திகழும் கௌலத்தின் தலைமகளே (92)

கௌலத்தினுள் தான் உறைந்து குலயோகினி ஆனவளே
கௌலமெனும் வழிபாட்டு முறையால் குளிர்பவளே
கௌலத்தினின் வந்த யோகமுறையை அருள்பவளே
கௌலத்தினும் மேற்பட்டு கௌலினி ஆனவளே (96)

ஸமயமுறை வழிபாட்டின் மையமாக இருப்பவளே
ஸமயாசார வழியில் உள்ளம் லயிப்பவளே
மூலாதாரத்தில் மூண்டெழும் கனலாய் ஆனவளே
ப்ரம்மக்ரந்தி எனும் முடியைப் பிளந்து உதிப்பவளே (100)

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**
**லலிதாவின் பாதமலர் பணிந்தேத்துவோம்**

**சந்த்ரஜ்யோதி 101–120 (ஸ ப ம க ம ப த ஸ்/ ஸ் த் ப ம தா, ப ம கா ரி ஸ/ ஸ ரி S S ம பா. ப ம க ம பா த ஸ்/ ஸ் த ப ம தா, ப ம கா ரி ஸ)**

மணிபூரக சக்ரத்தில் வெப்பமாய் ஒளிர்பவளே
மால்முடிச்சில் அகந்தையை அழித்து வெளிப்பட்டவளே
ஆக்ஞா சக்ரம் நடுவில் அமர்ந்தாட்சி புரிபவளே
அரன் முடிச்சினைப் பிளந்து அன்பின் மேலெழும்பிச் செல்பவளே (104)

ஆயிரமிதழ் தாமரையில் அழகுடன் அமர்ந்தவளே
அமுதரஸத்தினைப் பொழிந்து அருளோங்கும் சக்தியே
மின்னலின் ஒளிக்கீற்றினைப்போல் கண்ணெதிரில் வருபவளே
மிகப்பொலிவாய் மூலமுதல் அறுசக்கரங்கள் ஆனவளே (108)

மஹோத்ஸவ வழிபாட்டால் மனம் குளிர்ந்தருள்பவளே
மறைந்தடியில் சுருண்டுறங்கும் மகாஶக்தி யானவளே
தாமரைத் தண்டின் நூல்போல் சுழுமுனையாய் மெலிந்தவளே
தகைமையுடன் பவன் அவனின் தாரமாய்த் திகழ்பவளே (112)

பாவனையால் உனைமனதில் வரித்தவர்க் கருள்பவளே
பவமெனும் பிறவிக்காட்டை அறுத்திடும் கோடாரியே
பக்தர்களின் நன்மைகளை நன்குணர்ந்து அருள்பவளே
பரிவுடன் சௌபாக்கியங்கள் பதினாறும் பகிர்பவளே (116)

நன்மையின் வடிவாய் நின்று நம்பினோர்க் கருள்பவளே
திண்மையுடன் சரணடையும் பக்தியால் மகிழ்பவளே
உண்மையுடன் உணர்ந்தேத்திட உமையாகி அருள்பவளே
பண்ணிசையால் பாடுவோர்க்கு வசமாகும் வல்லவளே (120)

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**
**லலிதாவின் பாதமலர் பணிந்தேத்துவோம்**

**கீரவாணி 121–140 (ஸ ரி2 க1 ம1 ப த2 நி1 ஸ்)**

பயம் போக்கி ஜயம் தருவாள்
ஶம்பு மனைவி ஶாம்பவி
ஸரஸ்வதியால் தொழப்படுவாள்
ஸர்வன் துணைவி ஶர்வாணி (124)
(பயம் போக்கி)

சுகமனைத்தும் தந்திடுவாள்
ஶங்கரனில் அவள் பாதி
செல்வங்களை அருளிடுவாள்
சிறந்தபதி வ்ரதை யாகி (128)
(பயம் போக்கி)

குளிர்மதி ஒளிர் முகத்தினளே
குறைந்திளைத்த வயிற்றினளே
நிறைந்த மனம் கொண்டவளே
நிராதார உருவினளே (132)
(பயம் போக்கி)

களங்கமற்ற கவின் உருவே
கருமை மாசு அற்றவளே
பற்றற்ற மனத்தினளே
அழிவற்று ஆள்பவளே (136)
(பயம் போக்கி)

உருவமற்ற உறுப்பொருளே
உறுதியுடன் இருப்பவளே
குணபேதங்களைக் கடந்து
கூறுபடாத் தன்மையளே (140)
(பயம் போக்கி)

**பாக்யஶ்ரீ 141–160 (ஸ க2 ம த2 நி த2 ஸ்/ ஸ் நி த ம க ரி2 ஸ)**

அமைதியின் வடிவாய் இருப்பவளே
ஆசைகளே இல்லாதவளே

ஊழியினால் அழியாதவளே
உயிர்த்துறங்குவள் ஒவ்வொருநாளே (144)

வேற்றுமைக்கப்பாற் பட்டவளே
விண்ணையும் விஞ்சி விரிந்தவளே
எதையும் சார்ந்து இராதவளே
என்றும் தூய்மையாய் இருப்பவளே (148)

அழியா அறிவுப் பெட்டகமே
குறைவில்லா குணக் குன்றமே
இடைவெளி இல்லா இறைப் பொருளே
வித்தில்லாத விழுப்பொருளே (152)

களங்கமில்லாத காரிகையே
மாயையினால் மறுவாதவளே
தலையாண்மை இல்லாதவளே
தனக்கென்றெதையும் விழையாதவளே (156)

ஆசை வலைகளை அறுப்பவளே
செருக்கில்லாச் சீமாட்டியே
செருக்கினை ஒழித்துக் காப்பவளே
சிறிதும் கவலை இல்லாதவளே (160)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**மலஹரி 161–180 (ஸ ரி1 ம1 ப த1 ஸ்/ ஸ் த1 ப ப1 க1 ரி ஸா)**

அகந்தையற்ற அதிசயப் பெண்ணே
மதிமயக்கம் இல்லாதவளே
மதிமயக்கத்தினை மாய்ப்பவளே
மமதை என்பதில்லாதவளே (164)

மமதையைப் போக்கும் மாமருந்தே
பாவங்கள் அற்ற பார்வதியே
பாவத்தைப் போக்கி அருள்பவளே
கோபத்துக்கிடம் கொடாதவளே (168)

கோபத்தை அடங்கச் செய்பவளே
பேராசை என்பதில்லாதவளே
பேராசைப் பேயை வென்றவளே
ஐயப்பாடுகள் அற்றவளே (172)

ஐயங்களைப் போக்கிடுபவளே
பிறவியென்பதில்லாதவளே
பிறவிப் பிணியைத் தகர்ப்பவளே
சீராய் செயல்புரிந் திலங்குபவளே (176)

திரிபுகளற்ற திரிபுரையே
வேற்றுமையுணர்வில்லாதவளே
வேற்றுமை உணர்வை அழிப்பவளே
விநாசமற்ற வித்தகமே (180)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**கேதார்**

மரணபயம் போக்கி யருள்பவளே
செயல்நிலை கடந்த செவ்வியளே
தனித்தியங்குகின்ற தன்மையளே
ஒப்புமையில்லா ஒளிவிளக்கே (184)

ஒளிரும் கருமைக் குழலினளே
ஓர் ஆபத்தும் அற்றவளே
வரம்புகளை மீறாதவளே
எளிதாய் எட்ட ஒண்ணாதவளே (188)

நெருங்கிப் பழகுதற்கு அரியவளே
துர்கையின் வடிவம் கொண்டவளே
துக்கம் துடைக்கும் தூயவளே
சுகத்தினையருளும் சுந்தரியே (192)

துஷ்டர்களுக் கெட்டாதவளே
துஷ்டரை அடக்கும் துர்கையளே
குற்றங்கள் அற்ற குணவதியே
அனைத்தும் அறிந்த அன்னையே (196)

கருணையைப் பொழிந்திடும் காரிகையே
ஒப்பார் மிக்கார் இல்லாதவளே
ஒப்பில்லாச் சக்தியாய் ஒளிர்பவளே
மங்கல வடிவாய் மலர்பவளே (200)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**பெஹாக்**

நற்கதி நல்கிடும் நாயகியே
நலம் ஈந்திடும் ஈஸ்வரி அவளே
அனைத்துமாயிருந்தெமை ஆள்பவளே
அனைத்து மந்த்ர வடிவானவளே (204)

அனைத்து யந்த்ரங்களின் பேருருவே
அனைத்து தந்த்ரங்களின் உட்பொருளே
மனோன்மணியாகிச் சிறந்தவளே
மஹேஶ்வரனின் மஹாராணியே (208)

மஹா தேவியாய் மாண்புடன் இலங்கி
மஹாலஷ்மி தாயானவளே
ம்ருடனின் மனதிற்கு இனியவளே
மிகவும் பெரிய உருவினளே (212)

மாபெரும் பூஜைக்கு உகந்தவளே
மாபாதகம் தீர்த்திடுபவளே
மாயையாகி எம்மை யாள்பவளே
மகா ஸத்துவப் பேரருளே (216)

மகா ஶக்தியின் இருப்பிடமே
மாறா அன்பின் பிறப்பிடமே
பேரின்பத்தின் பெட்டகமே
பெருஞ்செல்வம்நிறை பொக்கிஷமே (220)

பெருவீர்யமுள்ள பெருந்தகையே
பேரார்ந்த வலிமை கொண்டவளே
பேரறிவின் வடிவானவளே
பெரும் ஸித்திகளுக் கதிபதியே (224)

மகா யோக யோகேஶ்வரியே
மாபெரும் தந்திர உட்பொருளே
மாபெரும் மந்திரப் பேருருவே
மாபெரும் யந்த்ரம் ஆனவளே (228)

மாபெரும் இருக்கையில் அமர்ந்தவளே
மஹாயாக முறைக்குரியவளே
மஹாபைரவரும் பணிபவளே
மஹேஶ்வரனின் பேரூழித் தாண்டவம்
-தனக்கு ஸாக்ஷியாய் இருப்பவளே (232)

காமேஶ்வரனின் பட்டமகிஷியே
திரிபுரை எனும் பேரழகியே
அறுநான்கு பணிகள் ஏற்பவளே
அறுநான்கு கலைகள் ஆனவளே (236)

அறுநான்கு யோகினீகணங்கள் பணியும் அருள்
பராசக்தியே
மனுவித்தையின் மறைபொருளே
சந்த்ர வித்தையாய் ஆனவளே
சந்த்ர மண்டலத்தை ஆள்பவளே (240)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**
**லலிதாவின் புகழைப் பரவிடுவோம்**
**லலிதாவின் பணியில் மனங்களிப்போம்**

**மிஸ்ரகமாஸ்/ குந்தலவராளி**

அழகிய வடிவினைக் கொண்டவளே
அழகிய சிரிப்பினைக் கொண்டவளே
அழியாச் சந்த்ரகலையைச் சூடி
அசைந்தசையா உலகாள்பவளே (244)

ஸ்ரீசக்ரமதில் நிலைத்தவளே
மலையரசனின் மகளானவளே
தாமரையொத்த கண் உடையவளே
பத்மராகம் போல் ஒளிர்பவளே (248)

பஞ்ச ப்ரேதாசனம் அமர்ந்தவளே
பஞ்ச ப்ரம்ம உருவானவளே
பேரறிவொளியாய்த் திகழ்பவளே
பேரானந்தம் கொள்பவளே (252)

புலன் மனம் விரும்பும் பொறையினளே
தவம் தவசி தெய்வமானவளே
அறம் மறம் அதைக்கடந்தமர்ந்தவளே
விஸ்வரூபி விஶாலாக்ஷியே (256)

விழிப்பு நிலையில் தோன்றிடுபவளே
கனவிலும் வந்தெனைக் காப்பவளே
ஒளிவெள்ளத்தினுள் உறைபவளே
உறங்கு நிலையில் உணர்வானவளே (260)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**
**லலிதாவின் புகழைப் பரவிடுவோம்**

**லலிதாவின் பணியில் களித்திடுவோம்**

**மலயமாருதம் 261–280 (ஸ ரி1 க ப த நி1 ஸ்/ ஸ் நி த ப க ப க ரி ஸ)**

பேரான்ம உணர்வின் இருப்பிடமே
துரிய நிலையில் உள்ள அனுபவமே
துரிய நிலைக்கு மேற்பட்டவளே
தோற்றுதல் தொழிலாய்க் கொண்டவளே (264)

படைக்கும் பிரமனாய் ஆனவளே
பாலித்திடும் பராபரியே
ஶார்ங்கபாணி வடிவானவளே
ஸம்ஹாரம் செய்யும் ஶங்கரியே (268)

ருத்ரனின் வடிவாய் வந்தவளே
மறைதலைச் செய்யும் மாயையே
ஈஶ்வர வடிவம் கொண்டவளே
ஸதாஶிவனுமாய் ஆனவளே (272)

அனுக்ரஹம் புரிந்தெமை ஆள்பவளே
ஐந்தொழில் புரிவதில் வல்லவளே
பானுமண்டல நடுவில் அமர்ந்து
பைரவியாய் எமைக் காப்பவளே (276)

பகமாலினியாய்த் திகழ்பவளே
பத்மபீடமுறை பவானியே
பகவதியாகி அருள்பவளே
பத்மநாபன் ஸோதரி அவளே (280)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**
**லலிதாவின் புகழைப் பரப்பிடுவோம்**
**லலிதாவின் பணியில் களித்திடுவோம்**

**கல்யாணி**

கண் இமைத்தே ஆக்கல் காத்தல் அழித்தல் புரிபவளே
ஆயிரம் தலைகளும் முகங்களும் கொண்ட அன்னை
பராசக்தியே
ஆயிரம் கண்களை உடையவளே, ஆயிரம் பாதங்கள்
கொண்டவளே
ஆயிரம் ஆயிரம் அன்னையராக அனைவரையும் காப்பவளே (284)

பிரமன் முதலாய் சிறு புழுவரையில் படத்துலகை
ஆக்கினளே
வர்ணாசிரமங்களை வகுத்து வாழும் வழி காட்டினளே
இறைக்கட்டளை நெறிகளைத் தந்து இனிய வழிகாட்டினளே
புண்ணியபாவ பலன்களைத் தந்து புவனமதை
ஆள்பவளே (288)

அவள் பாதத்துளிகள் வேதத்தாயின் வகிட்டில் நிறை
சிந்தூரமே
ஆகமசிப்பியுள் ஆனிமுத்தாகி அழகொளிர்ந்திடுபவளே
அறம் பொருள் இன்ப வீடுகள் எல்லாம்
அருள்புரிந்திடுபவளே
பரிபூரணி பரதேவதை எங்கள் அன்னை பார்வதியே (292)

இன்பங்களுக்கு இருப்பிடமான இனிய இமையவளே
புவனேஸ்வரியாய் விளங்கி புவனமதைக் காப்பவளே
புகழ்மிக்க ஜகன்மாதாய் பூஜைகளை ஏற்பவளே
ஆதியும் அந்தமும் அற்றவளே, ஆனந்தரூபி ஆனவளே (296)

ஹரிபிரம்மேந்திரர் அணைந்தவளே
நாராயணியாகி நவின்றவளே
நாத உருவினைக் கொண்டவளே
நாம ரூபம் இல்லாதவளே (300)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**ஸஹானா**

ஹ்ரீங்காரத் திருவுருவே
நாணமெனும் நற்பண்பே
உள்ளத்திற் குவப்பானவளே
வேண்டும் வேண்டாமை அற்றவளே (304)

இராஜ ராஜர் பூஜிப்பவளே
இராஜ்ஜியம் புரிந்துலகாள்பவளே
ரம்யமான அழகின் உருவே
ராஜீவநேத்ரம் கொண்டவளே (308)

களிப்பான மனம் கொண்டவளே
களியாட்டங்கள் புரிபவளே
நவரஸம் ததும்பும் நாயகியே
நகைக்கும் கிண்கிணி மணிமேகலையை
- அணியாக இடையில் பூண்டவளே (312)

இலக்குமியாகி அருள்பவளே
எழில் முழுமதிமுகம் கொண்டவளே
இரதியாகி மதனை ஆள்பவளே
இரதியை விரும்பியருள்பவளே (316)

ரக்ஷித் தெமக்கருள் புரிபவளே
ராக்ஷஸர்களை அழிப்பவளே
ரமணியர் வடிவாய் இருப்பவளே
ரமணனுடன் உரை செய்பவளே (320)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் புகழைப் பரவிடுவோம்**

**ஹம்ஸத்வனி**

அனைவரும் விரும்பும் அன்னையே
காமகலையின் வடி வானவளே
கதம்பமலரால் மகிழ்பவளே
கல்யாண வடிவம் கொண்டவளே (324)

ப்ரம்மாண்ட தருவின் வேரானவளே
கருணைக் கடலாய் விரிந்தவளே
கலைகளின் இருப்பிடம் ஆனவளே
கலைகளை மொழியாய் உடையவளே (328)

காந்தி மிகவும் கொண்டொளிர்பவளே
காதம்பரி தேனை பருகுபவளே
வரங்கள் அருள்வதில் வல்லவளே
வடிவெழிற்கண்கள் உடையவளே (332)

ஆனந்த வாருணியால் அகம்தனில் லயித்து
அனைத்திற்கும் மேம்பட்டு அமர்ந்தவளே
அருமறையால் அறிய படுபவளே
அழகு விந்த்ய மலை அமர்ந்தவளே (336)

உலகினைத் தாங்கும் உமையவளே
மறைகளின் பிறப்பிடம் ஆனவளே
விஷ்ணுமாயையாய் விளங்கியென்றும்
விலாஸினியாகிக் களிப்பவளே (340)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**
**லலிதாவின் புகழைப் பரவிடுவோம்**
**லலிதாவின் கழல்கள் கதியடைவோம்**

**ஹிந்தோளம்**

உயிரின் உறைவிடம் ஆனவளே
உறைவிடம் உடலினை ஆள்பவளே
உயிரையும் உடலையும் காப்பவளே
வளர்ச்சி தேய்வுகள் அற்றவளே (344)

உடலினை உடையவர் பணிபவளே
ஒப்பற்ற வெற்றிகள் உடையவளே
ஐவகை அழுக்குகள் அற்றவளே
அன்புடன் வணங்கிட அருள்பவளே (348)

வந்தித்தோர்க் கருள்மழை பொழிபவளே
வாக்வாதினியாய் ஆனவளே
வாமாகேஸ்வரரின் பத்தினியே
அக்னிமண்டலத்தில் உறைபவளே (352)

அன்பர்க்கு கற்பகம் ஆனவளே
ஜீவனின் தளைகளை அறுப்பவளே
பாஷண்டர்களை ஒடுக்குபவளே
நன்னெறியில் நடத்திவைப்பவளே (356)

தாபத்தீயில் தவிக்கும் அன்பர்க்கு
- சாந்தம் தந்திடும் தண்ணிலவே
இளமை ததும்பும் வடிவினளே
இச்சையறுத்தவர்க்கு இனியவளே
இடைமெலிந்திலங்கும் இமையவளே (360)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**
**லலிதாவின் புகழைப் பரவிடுவோம்**
**லலிதாவின் கழல்கள் கதியடைவோம்**

**ராகம்:மோஹனம்**

அறியாமை இருள் அழிப்பவளே
அஞ்ஞானம் நீக்கி சித்தானவளே
அதுவெனும் சொல்லின் அறிகுறியே
அனைத்திலும் ஒன்றாய் இனிப்பவளே (364)

ஆனந்தக் கடலாகி அனைத்து தேவரையும்
- அதிலொரு துளியாய் ஆக்கினளே
பரையெனும் பீஜ ஒலி வடிவே
உள்நோக்கி அறியும் பேரறிவே
உலகினை தன்னுள் உணர்பவளே (368)

பொறிகளுக்கெட்டாப் பேரொலியே
புலனறி நடுவொலி ஆனவளே
செவிக்கினிதான வைகரியே
சேவகர் மனமடுவில் அன்னமே (372)

காமேஸ்வரனின் உயிர்நாடியே
செயலின் உட்பொருள் அறிந்தவளே
காமனால் வணங்கப் பட்டவளே
ஸ்ருங்கார ரசம் நிறைந்தவளே (376)

ஜயையாகி வெற்றியருள்பவளே
ஜாலந்தர பீடம் அமர்ந்தவளே
ஔட்யான பீடம் உடையவளே
பிந்துமண்டலத்தில் வசிப்பவளே (380)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**ஜோன்புரி**

ரகசிய வேள்வியின் மறைபொருளே
ரகசிய தர்ப்பணம் ஏற்பவளே
உடனுக்குடன் அருள்புரிபவளே
உலகிற்கு ஸாக்ஷியாய் இருப்பவளே (384)

ஸாக்ஷியற்ற விஸாலாட்சியே
ஆறங்க தேவதைகள் உடையவளே
அறுநற்குணங்கள் நிறைந்தவளே
அருள்பெறுகும் உளம் கொண்டவளே (388)

ஒப்புமை இல்லா உயர்பொருளே
பரம் சுகம்தரும் பாலாம்பிகையே
பதினாறு நித்யதேவிகள் வடிவே
பதிக்கொரு பாதி தன்னில் தந்தவளே (392)

ப்ரபாவதியாகி ஒளிசூழ்ந்தவளே
ப்ரபையெனும் ஒளிவடிவானவளே
ப்ரசித்தி பெற்ற பேரன்னையே
பரமேஶ்வரியாய் பரிந்தருள்பவளே (396)

மூல மறைப்பொருள் ஆனவளே
வெளிப்படாத வித்தக பொருளே
வெளியில் சூக்ஷுமமாய் இருப்பவளே
வியாபித்துயிர்களில் நிறைந்தவளே (400)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**லலித்**

விதவிதமாய் உருவெடுப்பவளே
வித்தையும் அவித்தையும் ஆனவளே
விமலனின் அல்லிவிழிக்கு நிலவே
விரும்புவோர் உளத்தொளிர் பாஸ்கரனே (404)

ஶிவனைத் துதனாய்க் கொண்டவளே
ஶிவனால் வணங்கப் பெற்றவளே
ஶங்கரி மங்கள உருவினளே
சங்கடம் போக்கி மங்களம் தருபவளே (408)

ஶிவனுக்கு ப்ரியமான ஶிவசங்கரியே
ஶிவபரையாய் ஶிவனில் லயித்தவளே
சீடர்க்கு குருவாகி சிறந்தவளே
சீடர்கள் வழிபடும் சீலத்திருவே (412)

சிந்தைக் கெட்டாத சீரெழிலே
தானே ஒளிரும் தன்மையளே
மனம்வாக்கு கடந்த மாபரமே
ஞானவடிவான சித்சக்தியே (416)

உள்ளறிவால் உய்த்தறியும் உயர்பொருளே
ஜடப்பொருளிலும் உறங்கிடும் சக்தியே
ஜடமான ப்ரபஞ்சத்தில் உறையும் சக்தியே
ஜயம் தரும் காயத்ரியெனும் சக்தியே (420)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**பட்தீப்** **(ஹிந்துஸ்தானி)**

ஜீவாதாரமான ப்ரணவ ஶக்தியே
ஸந்தியாவாய் வணங்க பெறுபவளே
அந்தணர் தேவர்சூழ மகிழ்பவளே
தத்வ பீடங்களில் உறைபவளே (424)

"தத்" எனும் மறைப்பொருள் ஆனவளே
"த்வம்" எனும் ஜீவனும் ஆனவளே
"அயீ" என்றறியப்படுபவளே
ஐந்து கோசங்களில் வசிப்பவளே (428)

அளவிலா மகிமை உடையவளே
அழிவிலா இளமை உடையவளே
ஆனந்தக் களிப்பில் ஆழ்ந்தவளே
களித்துச் சுழலும் செங்கண்ணினளே (432)

களிப்பால் சிவந்த கன்னத்தினளே
களிர்நறுஞ் சந்தனப் பூச்சினளே
கவின் சம்பக மலரினை விரும்புவளே
கூர்ந்த அறிவினை உடையவளே (436)

மெல்லிய மேனியை உடையவளே
குருகுல்லை தேவியாய் ஆனவளே
குலத்தின் தலைவியாய் அமர்ந்தவளே
குலகுண்டாலயம் உறைபவளே (440)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**ராகம்–அமிர்த்தவர்ஷிணி**

கௌலத்தார் பணியும் கௌலினியே
குமரன் கணநாதனை ஈன்றவளே
குளிர்ந்துமகிழும் உளம் கொண்டவளே
குறையற்ற வலிமை கொண்டவளே (444)

மதிநுட்பமாக இருப்பவளே
மனோதைரியத்தின் வடிவினளே
மனசாந்தியாகி மிளிர்பவளே
மாறா நலவடிவானவளே (448)

நல்லவரை ஈர்க்கும் காந்தியளே
நந்தினியாகி நவில்பவளே
நல்வழியில் தடைத்தகர்ப்பவளே
நல்லொளியாக ஒளிர்பவளே (452)

சுட்டும் விழிமூன்றினை உடையவளே
சுழலும் விழியுடைய சூலிகாமாக்ஷியே
சூடும்மலர் அணிகளைக் கொண்டவளே
சூழும் அன்னப் புடையுடன் நடப்பவளே (456)

மாதர்களில் தனித்தன்மையளே
மலயமலையில் வசித்திருப்பவளே
மகிழ்ச்சி ஈந்திடும் முகத்தினளே
மலரும் நளினியாய் மிளிர்பவளே (460)

சுந்தரப் புருவம் கொண்டவளே
சோபனமாய்த் திகழ்ந்தருள்பவளே
சுரர்களுக்கெல்லாம் தலைவியே
சுந்தரேஸ்வரனின் துணைவியே (464)

காந்தியுடன் கவர்ந்திழுப்பவளே
கணக்கில் உணர்வுகளாய் உறைபவளே
கண்புலன் அறியா நுண்வடிவே
கடும் வஜ்ஜிரம்போல் வலியவளே (468)

வாமதேவனின் பத்தினியே
வயது நிலை மாறாதவளே
சித்தர்கள் போற்றும் தலைவியே
சித்தவித்தையாய் விளங்குவளே (472)

சித்தர்களுக்கெலாம் அன்னையே
சிறந்த புகழுக்கு உரியவளே
(யோகினீ நியாஸம்)
விஶுத்தி சக்ரத்தில் இருப்பவளே
வெளிர் இளம் சிவப்பு நிறத்தினளே (476)

விரிந்த முக்கண்களை உடையவளே
கட்வாங்கம் முதலான கலன்கள் கொண்டவளே
அனைத்தும் ஒருமுகமாய் அடக்கினளே
அன்னப் பாயஸம் விரும்புவளே (480)

அங்கமேல் தோலாய் மிளிர்பவளே
அறிவிலிகற் கச்சம் தருபவளே
அமிர்தாகர் ஷினிமுதலான பதினாறு
-மஹாசக்திகள் சூழ் அவையினளே
டாகினீ வடிவம் கொண்டவளே (484)

அநாகத்தில் அலர்ந்தவளே
அந்தியின் கருமை நிறத்தவளே
ஆகஸமும் வாயுவும் ஆனவளே
அழகொளிர் தெற்றிப் பற்களின் ஒளியால்
-அக்ஞான இருளை களைபவளே (488)

ஐம்பத்தோரு மணிகள் ஒளிர்ந்திடும் அக்ஷமாலையை
அணிந்தவளே
அபிமானியெனும் தாதுவாகி இரத்தில் ஒளிந்திருப்பவளே
காலராத்ரி முதல் பன்னிருசக்திகள் படையெனச்சூழ
வருபவளே
கலந்த அன்னதுடன் நெய்யால் மூடி படைக்க உள்ளம்
மகிழ்பவளே (492)

கலங்காத மாவீரர்க் கருள்பவளே
ராகிண்யம்பா யோகினி வடிவினவளே
மணிபூரக சக்ரத்தில் மறைந் தொளிர்பவளே
வாயு, அக்னி, ஆகாஸமெனும்- முகங்கள் மூன்று
கொண்டவளே (496)

வர்ஜம், வேல், தடி, பாஶம் தரித்தவளே
டாமரீ முதலாம் சக்திகள் சூழ்ந்தவளே
இரக்த நிரத்தில் ஒளிர்ந்திடுபவளே
மாமிசத்தில் மறைந்துள்ள ஜீவசக்தியே (500)

ஓம் ஐம் ஹ்ரீம் ஶ்ரீம்

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**

**லலிதாவின் பாதமலர் பணிந்து ஏத்துவோம்.**

**ராகம்: மாயாமாளவ கௌள**

மதுரமான வெல்லப் பொங்கலால் மகிழ்ந்தருள் புரிபவளே
மகாசக்தியாய் பக்தர்க்கு சுகம் அனைத்தும் அருள்பவளே
மணிபூரக சக்ரத்தில் லாகினியாய் இருப்பவளே
மலர்ந்த அறுதளாம்புஜமாய் ஸ்வாதிஷ்டானத்தில்
உறைபவளே (504)

முகங்கள் நான்கும் விண்வளி நீர்த்தீ ஆனவளே-
மும்முனைச்
சூலம், பாஷம், கபாலம் அபயகரம் கொண்டவளே
மஞ்சள் நிறத்தழகியாகி மாவீரம் செறிந்தவளே
மகாசக்தி உருவாகி செறுக்குடன் மிளிர்பவளே (508)

மதிநுட்பம் விளங்க கொழுப்புத் தாதுவாயகி உறைபவளே
மதுவெனும் தேனாலான பானகம் விரும்புவளே
பந்தினீ முதலான அறு சக்திகள் சூழ்ந்திருப்பவளே
பசுந்தயிர் கலந்த வெள்ளை அன்னத்தால் மகிழ்பவளே (512)

காகினியெனும் யோகினி வடிவம் கொண்டு மிளிர்பவளே
மூலாதாரத்தில் முழுமுதற் பொருளாய் ஒளிர்பவளே
ஸாகினி எனும் யோகினியாய் ஐம்பூதத்தில் உறைபவளே
அஸ்தியெனும் தாதுவாகி எலும்புகளாய் ஆனவளே (516)

அங்குஶம், தாமரை, புத்தகம், ஞான முத்திரை தரித்தவளே
அக்ஷர சக்திகளாம் வரதாமுதலோர் வழிபடுபவளே
பயரான்னப் பொங்கலைப் பரிந்துவந்து ஏற்பவளே
ஸாகினி எனும் யோகினியாய் புகைநிற வடிவத்தினளே (520)

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**
**லலிதாவின் பாதமலர் பணிந்து ஏத்துவோம்.**

**ராகம்: ரீதிகௌள**

இருபுருவத்திடை எமது இலக்காகி இலங்குபவளே
வெண்ணிறம் பொலிய விண்ணுக் கதிபதியாய்
விளங்குபவளே
அறுமுகங்களுடன் ஆக்ஞா சக்ரத்தில் அமர்ந்தவளே
நிணத்தாதுவாகி நிறைந்த உடல் உரம் அருள்பவளே (524)

ஹம்ஸவதி க்ஷமாவதீ ஶக்திகளாய் இருப்பவளே
அன்னத்தில் மஞ்சள் சேர்த்த அமுதில் மகிழ்பவளே
ஹாகினி எனும் யோகினியாய் ஆக்கினையில் ஆள்பவளே
ஆயிரமிதழ் தாமரையில் அழகொளிர அமர்ந்தவளே (528)

அனைத்து வண்ணங்களுடன் ஒளிரும் அருள்நிதியே
அம்மா
அனைத்துவித ஆயுதங்கள் அழகுடன் தரித்தவளே
சுக்கிலமெனும் தாதுவாகி சுகமனைத்தும் தருபவளே
எத்திசை நோக்கினும் சக்தியின் முகமாய் ஒளிர்பவளே (532)

எல்லாவித உணவுகளும் ஏற்றெமக்கு அருள்பவளே
யாகினியாய் ஸஹஸ்ரார சக்ரத்தில் ஒளிர்பவளே
ஸ்வாஹாவாகி தேவர்களின் ஆஹுதியை ஏற்பவளே
ஸ்வதாவாகி பித்ரு ஹோமம் தனையும் ஏற்பவளே (536)

அறிந்தும் அறியாத அவித்யையாய் இருப்பவளே
அளப்பறிய அறிவுடன் மேதாவாகி திகழ்பவளே
மாதவர் ஏத்தும் மறைப்பொருள் வேதாவாய் விளங்குபவளே
ஸ்ருதியின் ஸாரமாம் ஸ்ம்ருதிகளாய் ஆனவளே (540)

**லலிதாவின் ஆயிரம் நாமமதைப் போற்றுவோம்**

**லலிதாவின் பாதமலர் பணிந்தேத்துவோம்**

**ராகம்: பீம்பலாஸி**

அவளினும் மேன்மை அவர் எனப் பறைய அங்கோர்
பொருள் இல்லாதவளே
அளவிடற்கரிய புண்ணிய பலனால் அடையும் புகழாய்
ஆனவளே
புண்ணியம் செய்தோர் எண்ணிய போதில் எளிதில்
அடையத் தக்கவளே
புகழ்ந்தேத்திப் பாடும் பாணர்க்கு புண்ணிய பலனைத்
தருபவளே (544)

புலோமை எனும் இந்திராணி தேவியால் பூஜித்தடையப்
படுபவளே
புவியில் மீண்டும் பிறவாவண்ணம் பிறவித்தளைகளை
அறுப்பவளே
புரிகளாய் சுருண்டு முன்நெற்றியில் புரளும் குழலினைக்
கொண்டவளே
புரியாத பரம்பொருளை விளக்கும் விமர்சை எனும் உரு
கொண்டவளே (548)

புரிந்திட அரிதான வேதத்தினுள் வித்தாகி வித்யை
ஆனவளே
புவியுடன் விண்ணுலகமும் மற்றவையும் ஈன்றளித்த
இனியவளே
நோய்களை போக்கி வைத்தீஸ்வரி எனும் பெயரால்
அன்பர்க்கருள்பவளே
நோய் பிணி மற்றும் வினையால் வந்திடும்
மரணத்தினின்று காப்பவளே (552)

நோன்புகள் செய்து வணங்கும் அன்பர்க்கு அருள்வதில்
முதன்மை ஆனவளே
நோற்று பணியாதவர்க்கு நுண்ணிய வடிவாய்
எண்ணற்கரியவளே (554)

**லலிதாவின் நாமம் ஆயிரம் ஆயிரம் பாடிப் பணிந்து**
**வணங்கிடுவோம்**
**லலிதாவின் பெரும் புகழினைப் பேசி நாளும்**
**நன்மைகள் அடைந்திடுவோம்**

**பூபாளம்**

கலிதோஷத்தைப் போக்குவளே
காத்யாயனி வடிவானவளே
காலனுக்கும் முடிவருள்பவளே
கமலகண்ணன் வணங்கும் திருவே (558)

தாம்பூலம் தரித்த வாயினளே
மாதுளை போல் சிவந்த மேனியளே
மானின் விழிகொண்ட மாதவியே
மாதவரும் மயங்கும் மோஹினியே (562)

முதன்மைப் பொருளாய் ஆனவளே
ம்ருடனுக்கினிய இல்லாளே
மித்திரன் வடிவாய் ஆனவளே
மிக்க த்ருப்தியுடன் மகிழ்பவளே (566)

பக்தர்கள் மனத்துறை பொக்கிஷமே
பாலித்தடக்கி ஆள்பவளே
பசுவுலகத்தின் ஈஸ்வரியே
மைத்ரி கருணாமுக்தா உபேக்ஷா வாஸனைகளால்
அடையத்தக்கவளே (570)

பேரூழிக்கு ஸாக்ஷியானவளே
இச்சை க்ரியை ஞான பராஶக்தியே
நிஷ்டையின் எல்லையில் நின்றவளே
உணர்ந்தறிய எட்டும் உட்பொருளே (574)

மாத்வீபானம் உண்டிளைப்பாறினளே
மதம் கொண்டுலகினை அடக்கினளே
மாத்ருகா வர்ண உருவினளே
மஹாகைலாஸம் உறைபவளே (578)

தாமரை கைகள் உடையவளே
தாழ்ந்து வணங்கிடத் தக்கவளே
தயையுள்ளம் கொண்டதாயவளே
தலைவர்களுக் கெல்லாம் தலைவியே (582)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**
**லலிதாவின் புகழைப் பரவிடுவோம்**
**லலிதாவின் கழல்கள் கதியடைவோம்**

**ரேவதி**

ஆத்மவித்தை அறிவானவளே
மஹாவித்தையாய் மலர்ந்தவளே
ஸ்ரீவித்யையாக திகழ்பவளே
காமன் வணங்கும் காமேஸ்வரியே (586)

ஷோடஶாக்ஷரீ ஆனவளே
முக்கூடவடிவம் கொண்டவளே
காமகோடியாய் இருப்பவளே
கோடி லக்ஷ்மிகள் பணிபவளே (590)

ஸிரஸின் உச்சியில் நிற்பவளே
சந்திரனாகி குளிர்விப்பளே
நெற்றிப்பொட்டில் நிலைத்திருப்பவளே
வானவில்லொத்து ஒளிர்பவளே (594)

இதயத்தில் அன்பாய் இசைந்தவளே
இரவியின் காந்தி ஒளியானவளே
முக்கோணத்தில் ஒளிர்பவளே
முதலில் தக்ஷன்மகள் ஆனவளே (598)

தவறிழைப்பவரை அழிப்பவளே
தக்ஷனின் யாகத்தை சிதைப்பவளே
அசையும் நீள் விழியினள் அவளே
அளவாய்ப் புன்சிரித்திடும் அனையே (602)

குருவின் வடிவாய் ஆனவளே
குணக்குன்றான குணநிதியே
கோமாதாவாய் திகழ்பவளே
குகனின் அனையாய் ஆனவளே (606)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**ஸரஸாங்கி**

தேவர்களையாளும் தேவியே
தண்டநீதியை வகுத்தவளே
உளக்குகையில் உறை ஆகாஶமே
வளர்பிறை பூஜைக்குகந்தவளே (610)

கலைகளின் உட்பொருள் ஆனவளே
கலைகளுக்கெல்லாம் அதிபதியே
காவ்யங்களால் உளம் மகிழ்பவளே
கைவிசிறி கொண்டு கமலை வாணியும் இருபுறம்
சேவிக்கும் இறையவளே (614)

காலத்தை வென்ற ஶக்தியே
கணக்கில் அடங்காத உருவினளே
ஆத்ம வடிவாய் உள் உறைபவளே
அளவில் அடங்காத பரம்பொருளே (618)

அழுக்கற்ற செயல் புரிபவளே
அனேககோடி உயிர்கள் ஈன்றவளே
அதிரமணீய வடிவினளே
க்லீம்கார உருவானவளே (622)

தனித்துவம் உடைய தகையவளே
தரணியில் மிக ரகசியம் அவளே
முழுமையில் நிலைத்திட அருள்பவளே
மும்மூர்த்திகளுக்கும் முதன்மையளே (626)

மூவுலகும் வணங்கிடும் அனையே
மும்மூர்த்தி வடிவம் ஆனவளே
முப்பத்து முக்கோடி தேவர் தேவியே
மூன்றெழுத்து பீஜ மந்திரமே (630)

**ஹிந்தோளம்**

மோனநிலை கூட்டும் மணம் கமழ்பவளே
முகமொளிர் குங்கும பொட்டணிபவளே
உமையென்ற நாமம் கொண்ட கன்னியே
உயர்ந்த மலையரசன் இமவான் புதல்வியே (634)

உளங்கவர் வெளிர்நிற அழகி கௌரியே
உருகி இசைத்து கந்தர்வர் பணிபவளே
உலகை தன் கருவில் கொண்டவளே
ஒளிரும் ஹிரண்யகர்ப்ப வடிவினளே (638)

ஒடுக்கும் அவதாரமாய் வருபவளே
ஓரெட்டு வாக்தேவதைகள் ஆனவளே
ஒருமனதாய் நோக்கத் தெரிபவளே
ஓரிடம் ஓர் பொருளில் அடங்காதவளே (642)

திரண்ட ஞானத்தை அருளிடுபவளே
திரிபற்ற ஞான வடிவினள் அவளே
உபநிடதங்கள் உரைக்கும் ஒருபொருளே
உண்மை பேரானந்த வடிவினளே (646)

உருகி லோபமுத்திரை பணிந்தவளே
உலகை விளையாட்டாகப் படைத்தவளே
ஊனப்பார்வைக்கு தெரியாதவளே
புலனுணராப் பொறியற்றவளே (650)

**லலிதாவின் நாமம் போற்றிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**மேக்மல்ஹார்**

விக்ஞாத்ரீ எனும் விசேஷ அறிவொளிர் திருவே
விண்டறிய இனியேதும் இல்லாதவளே
யோகினியாகி எல்லா அறிவும் ஒருசேர்ந்தவளே
யோகதன்மையை அருளிடும் பேரருள் நிதியே (654)

யோகநெறிதனில் வாழ்ந்து அடையத்தக்கவளே
யோகத்தால் அடையும் ஆனந்த வடிவினளே
இருமை நிலைக்கு இடையில் நிலைக்கும் தன்மையளே
இச்சை, ஞானம், க்ரியா சக்திகளின் வடிவினளே (658)

இருப்புடைய அனைத்திற்கும் ஆதாரமானவளே
இகமதில் சோபனமான இடத்தை உடையவளே
இன்றும் என்றும் உளதாய் இலதாயும் ஒளிர்பவளே
உயர்ந்த எட்டு மூர்த்திகள் உருவாக ஆனவளே (662)

அஜாஜேத்ரீயாய் அவித்யை அகல அருள்பவளே
அனைத்து உயிர்களும் உய்யும் வழியில் நடத்துவளே
தனித்தோங்கி நின்று தானே செயல் புரிபவளே
பூமாவாகி அனைத்து உருவங்களும் ஆனவளே (666)

இருமை என்பது இயல்பில் இல்லாத இமையவளே
இருமை என்னும் மாயயை வேரறுப்பவளே
அன்னம் அளித்து அன்னபூரணியானவளே
அனைத்துச் செல்வமும் அளிக்கும் வஸூதா அன்னையே (670)

**லலிதாவின் ஆயிரம் நாமங்களைப் பாடிடுவோம்**
**லலிதாவின் பெயர்களைப் புகழ்ந்து பரவிடுவோம்**

**சந்த்ரகோஷ்**

முதிர்ந்து விளங்கும் மூத்தவளே
ஜீவனும் பிரம்மமும் சேர்ந்தவளே
பேருருவம் கொண்ட பெருந்தகையே
ப்ராஹ்மணன் சிவனின் பத்தினியே (674)

ப்ராஹ்மியான வாக் வடிவினளே
ப்ரஹ்மானந்தம் ஆனவளே
பலியாகி வந்தவரைக் காப்பவளே
பாஷைகள் பலவும் ஆனவளே (678)

உயர்பெருஞ் சேனை உடையவளே
உயிர்த்தல் மடிதல் அற்றவளே
எளிய வழியில் எழுந்தருள்பவளே
எண்ணிய நற்பலன் கொடுப்பவளே (682)

ஏற்புமிகு இலக்காய் இலங்குவளே
எண்திசையாள் ராஜராஜேஸ்வரியே
இதய ராஜ்ஜியத்தை அளிப்பவளே
இராஜ்ஜியம் புரிபவர்க் கருள்பவளே (686)

இரசங்களில் கருணையாய் ஒளிர்பவளே
ப்ரஹ்மாராஜ்ஜியமதை அருள்பவளே
இராஜ்ஜிய லக்ஷ்மியைத் தருபவளே
பொக்கிஷங்களுக்கு அதிபதியே (690)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**அடாணா**

நால்வகைப் படைகளின் அதிபதியே
நாநிலம் ஆள அருள்பவளே
நல்வாக்கிற்குற்பட் பட்டவளே
நகையாய் கடல்தனை அணிந்தவளே (694)

தீக்ஷையால் ஞானம் அருள்பவளே
தீய அசுரர் குலம் அழிப்பவளே
திக்கெட்டுலகும் வசமானவளே
தேர்ந்த பெறும் பேரருள்பவளே (698)

ஸாவித்ரீயாகி ஒளிர்பவளே
ஸச்சிதானந்த உருவினளே
தேசகாலம் கடந்திலங்குவளே
அனைத்திலும் வ்யாபித்திருப்பவளே (702)

மோகத்தில் மூழ்கச்செய்பவளே
மோகத்தின் மீட்கும் ஸரஸ்வதியே
சாத்திர வடிவினள் ஆனவளே
சாதகன் உளக்குகை உறைபவளே (706)

இரகசிய ரூபம் கொண்டவளே
உபாதிகளற்று உயர்ந்தவளே
ஸதாஶிவனின் பதிவ்ரதையே
ஸம்பிரதாயத்தின் தலைவியே (710)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**மதுவந்தி**

ஈசனுக் குசிதமாய் இலங்குவளே
"ஈம்" எனும் காமகலா வடிவினளே
குருமண்டல வடிவானவளே
குலமெனும் புலன்களுக்கெட்டாதவளே (714)

சூர்ய மண்டலத்தின் சுடரொளியே
மாயையான மகாசக்தியே
மதுமதியாகி மயக்குவளே
மாபெரும் பூமியாய் இலங்குவளே (718)

ஶிவகணங்களின் தாயானவளே
குபேர கணங்களுக் கருள்பவளே
கோமள மென மென்உடலினளே
குருவினுக்குப் ப்ரியமானவளே (722)

ஸ்வதந்திரமான ஸ்ரீவித்யையே
அறுநான்கறிவியற்க்கதிபதியே
தக்ஷிணா மூர்த்தியானவளே
ஸனகாதியர் பணிதிரிபுரையே (726)

நலம் தரும் அறிவினை அருள்பவளே
சித்கலா ரூபியாய் இருப்பவளே
ஆனந்தமெனும் மொட்டானவளே
அன்பெனும் மலராய் மலர்ந்தவளே (730)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**அமிர்தவாஹினி**

அடியவர் விருப்பத்தை அருள்பவளே
அருள்நாமத்துதியில் மகிழ்பவளே
நந்தியார் வணங்கிய மந்த்ரரூபியே
நடனமாடும் ஈசனின் துணையே (734)

நிழல் மாயவுலகின் உறுப்பொருளே
நிலையான முக்தி தருபவளே
முக்தி நிலையில் நிலைத்திருப்பவளே
முத்தனுடன் ஒத்த நடம் புரிபவளே (738)

லயமெனும் நிலையைத் தருபவளே
லஜ்ஜையின் வடிவாய் இருப்பவளே
இரம்பை முதலியோர் துதிப்பவளே
துயர்தீ அணைக்கும் அமிர்த வர்ஷினியே (742)

வினையெனும் காட்டை அழிக்கும் "தீ" அவளே
துர்பாக்ய பஞ்சை தூற்றும் சுழலே
மூப்பிருள் போக்கும் சூர்யகாந்தியே
பாக்யகடல் பொங்கச் செய்யும் சந்த்ரிகையே (746)

பக்தர் மனமயில் களிக்கும் மேகமே
பசிப்பிணி நோய்களை பிளக்கும் வஜ்ரமே
மரணபய மரம்-களையும் கோடாரியே
மஹேஸ்வரி என்ற பெரிய தாயவளே (750)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**துர்கா**

மஹாகாளியாய் காலத்தை ஆள்பவளே
மஹாக்ராஸாவாய் ப்ரபஞ்சங்களை விழுங்குவளே
பேருண்டியாக உலகினையே உட்கொள்பவளே
சிறுஇலை கூட உண்ணாமல் தவம் புரிபவளே (754)

வீணர்களிடம் கோபம் கொள்ளும் சண்டிகையே
வீரத்துடன் சண்டமுண்டரை வீழ்த்தினளே
எண்ணற்ற எழுத்து வடிவங்களாக திகழ்பவளே
எல்லா உலகங்களுக்கும் அதிபதி ஆனவளே (758)

இகபர உலகம் எல்லாவற்றையும் தாங்குவளே
அறம், பொருள், இன்பம் மூன்றும் அருளும் அன்னையே
ஸௌபாக்கியங்கள் எல்லாம் சூழப்பெற்றவளே
சந்த்ர சூரியன் அக்னி முக்கண்களை உடையவளே (762)

முக்குண வடிவமாய் இருப்பவளே
மோக்ஷமும் ஸ்வர்கமும் தருபவளே
மோக்ஷமும் ஸ்வர்கமும் தருபவளே (764)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**மலஹரி**

செருக்கற்று சுத்தமானவளே
செம்பருத்தி போன்று சிவந்தவளே
ஓஜஸ் எனும் தாது ஆனவளே
உயிரில் ஒளியாய்க் கலந்தவளே (768)

வேள்வி வடிவமாய் இருப்பவளே
விரதங்களில் விருப்பம் உடையவளே
சிர மேற்கொள்பவர்க் கருள்பவளே
வசப்படாத வல்லவள் அவளே (772)

பாதிரிப்பூவால் மகிழ்பவளே
மஹத் எனும் மிகப் பெரியவள் அவளே
மேரு மலை மீது வசிப்பவளே
மந்தார மலரால் மகிழ்பவளே (776)
வீரர்கள் வணங்கும் துர்கையளே
விராட் ரூபியாய் விரிந்தவளே
ரஜோகுணங்கள் இல்லாதவளே
எங்கும் முகங்கள் உடையவளே (780)

உள்நோக்குடையவர்க் கொளிர்பவளே
பேராகாய வடிவினளே
ப்ராண ஶக்தியை கொடுப்பவளே
ப்ராண ரூபியாய் இருப்பவளே (784)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**பைரவி**

மார்த்தாண்ட பைரவர் போற்றுபவளே
மந்த்ரிணியிடம் ராஜ்யம் கொடுத்தவளே
முப்புரமதை ஆளும் தலைவியே
வெற்றிபெறும் சேனை உடையவளே (788)

முக்குணங்களையும் கடந்தவளே
பராபரையெனும் ப்ரம்ம நிலையினளே
ஸத்ய ஞானானந்த மூர்த்தியே
ஸமரஸமாய் ஒரு நிலைகொண்டவளே (792)

சடைமுடியனின் துணைவி கபர்தினியே
அறுநான்குகலை மாலை அணிந்தவளே
காமதேனுவாய் வரமளிப்பவளே
காமரூபியாய் உருவெடுப்பவளே (796)

கலைகளுக்கெல்லாம் இருப்பிடமே
காவிய கவிகளை ஈன்றவளே
காவிய ரஸத்தை போற்றும் திருவே
காவியரஸத்தின் பொக்கிஷமே (800)

அன்பால் புஷ்டியாய் இருப்பவளே
ஆதி இல்லாத பரம்பொருளே
ஆராதனைகளை ஏற்பவளே
அன்புடன் புஷ்டியை அளிப்பவளே (804)

பதும மலர் விழியினள் அவளே
பரஞ்ஜோதியாகி ஒளிர்பவளே
பரந்தாம நிலையில் உறைபவளே
பரமாணுவாக ஒளிந்திருப்பவளே (808)

பரத்தை மிஞ்சிய பராபரியே
பாஶத்தினைக் கையில் கொண்டவளே
பாஶமெனும் கட்டை அவிழ்ப்பவளே
பரமந்திரங்களை உடைப்பவளே (812)

புலன் உணர் பொருளாய் இருப்பவளே
புலன்களுக் கெட்டா பொக்கிஷமே
பூ, இலை, பழங்களால் மகிழ்பவளே
புண்ணியர் மனத்தில் களிக்கும் அன்னமே (816)

உண்மையை விரதமாய் உடையவளே
உண்மையான உறுப்பொருள் அவளே
உள்ளத்தில் உள்ளதை அறிபவளே
உமாமகேஶனின் பதிவ்ரதையே (820)

ப்ரம்ம ஶக்தியாம் ப்ரஹ்மாணியே
ப்ரம்மாவாகவே ஆனவளே
ஜநநீ எனும் பெயர் கொண்டவளே
பலவித ரூபங்கள் உடையவளே (824)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**ஜோக்**

ஞானிகள் பூஜிக்கும் நாயகியே
நாநிலம் அதைப் படைத்தளித்தவளே
நன்மைதரும் கோபம் மிகுந்தவளே
ஆணை பிறப்பிக்கும் ஆதி ஶக்தியே (828)

ஆதார ப்ரதிஷ்டை ஆனவளே
அங்கிங்கெங்கும் நிறைந்தவளே
ப்ராண ஶக்தியை ஆள்பவளே
பதினொரு புலன்களை கொடுப்பவளே (832)

ஐம்பது பீடத்திற் கதிபதியே
கருமத்தளைகளை கடந்தவளே
தனித்த இடத்தினில் தங்குவளே
தவ வீரர்களுக்கெலாம் தாயே (836)

ஆகாயத்தினை ஈன்றவளே
ஆனந்த முக்தி அளிப்பவளே
முக்திக்கு இருப்பிடம் ஆனவளே
மூல விக்ரஹ ரூபிணியே (840)

**பா**வ நிலைகளை அறிந்தவளே
**ப**வ ரோகத்தினை அகற்றுபவளே
**ப**வ சக்கிரத்தை சுழற்றுபவளே
பாடும் சந்த ஸாரம் அவளே (844)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**வர்ணரூபிணி**

சாத்திரங்களின் ஸாரம் அவளே
மந்திரங்களின் ஸாரம் அவளே
கைத்தலம் போன்ற சிற்றிடையினளே
கணக்கில் கீர்த்திகள் உடையவளே (848)

அளவிலடங்கா பெருமையளே
வர்ணரூபிணி ஆனவளே
பிறப்பிறப்பு மூப்பை முடிப்பவளே
உபநிடதங்களின் உயர்கருத்தே (852)

ஆகாஶ தத்வ கலை அவளே
ஆழங்காண முடியாதவளே
ஆகாய நடுவில் மிளிர்பவளே
ஆளுமைத் தன்மை உடையவளே (856)

கானத்தை ரசித்து மகிழ்பவளே
கற்பனைகளில் மயங்காதவளே
கடைநிலைப் பொருளாய் இருப்பவளே
கர்மபாபவினை அழிப்பவளே (860)

கணவனில் பாதியைக் கொண்டவளே
கார்யகாரணத்தை விஞ்சினளே
காமேஶ்வரன் களிக்கும் கடலே -ஒளிர்
கனக காதணியை அணிந்தவளே (864)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**கலாவதி**

லீலையாய் வடிவங்கள் எடுப்பவளே
கருவழிப்பிறவா கருப்பொருளே
தேய்வில்லாத திரிபுரையே
அறிவும் அழகும் சேர்ந்தவளே (868)

விரைவில் அருள் பாலிப்பவளே
உள்நாட்டத்தால் உவப்பவளே
வெளிநாட்டத்தால் விளங்காதவளே
மூன்று வேதத்தின் வடிவினளே (872)

மூன்று வர்கங்களில் நிலைத்தவளே
மும்மூன்றுகளில் இருப்பவளே
திரிபுரமாலினி ஆனவளே
நோயற்ற நிராமயை அவளே (876)

பற்றற்ற நிலையில் நிலைத்தவளே
தனக்குள் லயித்து களிப்பவளே
அமிர்தப் பெருக்காக ஆனவளே
ஆழ்குழியினின் றன்பரை மீட்பவளே (880)

வேள்வியில் விருப்பம் உள்ளவளே
வேள்வியை நடத்தும் வேதியளே
வேள்விதனக்கு யஜமானியளே
தர்மமதைத் தாங்கி நிற்பவளே (884)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**ஸ்ரீராகம்**

செல்வத்துக் கெல்லாம் அதிபதியே
செல்வங்கள் பெருக அருள்பவளே
வேதம் உரைப்பவரை விரும்புவளே
வேதியர் வடிவில் தோன்றுவளே (888)

உலகினை சுழலச் செய்பவளே
உலகினைக் கவளமாய் உண்பவளே
பவளத்தை ஒத்த மேனியளே
வைஷ்ணவியாகி அருள்பவளே (892)

விஷ்ணுவின் ரூபமாய் இருப்பவளே
பிறப்பிடமது இல்லாதவளே
பிறப்பிடமாக இருப்பவளே
கூடஸ்த நிலையில் இருப்பவளே (896)

குலரூபிணியாய்த் திகழ்பவளே
வீரர் சங்கத்தை விரும்புவளே
வீரர்கள் வடிவாய் ஆனவளே
வினைதொடர்புகள் இல்லாதவளே (900)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**யாகப்ரியா**

விளங்கு ஓம்கார உருவினளே
விக்ஞானம் வளரச் செய்பவளே
விதவித கலைகளில் சிறந்தவளே
விகட சாதுர்யம் நிறைந்தவளே (904)

தயங்கும் சக்தியவள் பிந்துவிலே
தத்வங்களைத் தாண்டி நிற்பவளே
தத்துவப் பொருளாய்த் திகழ்பவளே
தத்வமஸி வாக்யபொருள் அவளே (908)

ஸாமகானத்தில் மகிழ்பவளே
சந்திரன்போல் குளிர்தன்மையளே
ஸதாஶிவனின் குடும்பினியவளே
இடைபிங்கலையாய் இருப்பவளே (912)

இடர்களைப் போக்கும் இமையவளே
எதற்கும் கலங்காத இறைமதியே
இனிய குணமதைக் கொண்டவளே
இயல்பில் தீர தன்மை உடையவளே (916)

தீரர்கள் பூஜிக்கும் திருவே
சித்தத்தை அர்க்யமாய் ஏற்பவளே
சைத்தன்ய மலரில் மகிழ்பவளே
ஸதா உதயமாகும் ஒளியே (920)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**
**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**பெஹாக்**

ஸதானந்தமய ரூபிணியே
சிறிதே சிவந்தொளிர் சூரியனே
சதுரர் பாமரரும் பணியவளே
சற்றலர் தாமரை முகத்தினளே (924)

கௌலமும் ஞானமும் உடையவளே
கைவல்ய பதத்தை கொடுப்பவளே
துதிகளில் பிரியம் உடையவளே
துதிப்போர்க்கு அனைத்தும் அருள்பவளே (928)

வேதங்கள் போற்றும் வைபவியே
சுதந்திரமான மனஸ்வினியே
உயர்ந்த உள்ளத்தினை உடையவளே
உமா மகேசனை ஆள்பவளே (932)

மங்கள வடிவம் உடையவளே
மாபெரும் உலகை ஈன்றவளே
விரிந்த உலகைத் தாங்குவளே
விசாலக் கண்கள் உடையவளே (936)

வைராக்ய ஸீலம் நிறைந்தவளே
துணிவும் திறனும் கொண்டவளே
சிறந்த கொடைவள்ளல் அவளே
சிறந்த கீர்த்தியை உடையவளே (940)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**வசந்தா**

மனத்தை ரூபமாய் உடையவளே
வானத்தை கூந்தலாய் கொண்டவளே
விமானத்தில் வீற்றிருப்பவளே
இந்திராணியின் வடிவானவளே (944)

வாமமார்க்கத்தவர் பணிபவளே
பஞ்ச யஞ்ய ப்ரியை ஆனவளே
பஞ்ச ஸவாசனம் அமர்ந்தவளே
பஞ்சமியெனும் பெயர் கொண்டவளே (948)

பஞ்ச பூதங்களை ஆள்பவளே
பஞ்ச உபசாரம் கொள்பவளே
நிலைத் தென்றன்றும் நிற்பவளே
நிலையான செல்வம் தருபவளே (952)

நிலைத்த இன்பத்தை தருபவளே
நீலகண்டன் விரும்பும் ஸகியே
பூமியின் வடிவம் ஆனவளே
பர்வத வடிவம் கொண்டவளே (956)

நன்றியுள்ள குணம் உடையவளே
தர்மத்தில் மனம் நிறைபவளே
தர்மத்தை விருத்தி செய்பவளே
தரணியைக் கடந்து இலங்குவளே (960)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**மத்யமாவதி**

குணங்களுக் கப்பாற்பட்டவளே
அனைத்துக்கும் அப்பாற்பட்டவளே
ஶாந்த ஸ்வரூபம் உடையவளே
பந்தூக மலர்போல் காந்தியளே (964)

பாலா திரிபுர ஸுந்தரியவளே
லீலா விநோதினியும் அவளே
ஸுமங்கலியாகிப் பொலிபவளே
ஸுகங்கள் அனைத்தும் அருள்பவளே (968)

சிறந்த ஆடையணி உடையவளே
ஸுவாஸினியாக ஒளிர்பவளே
ஸுவாஸினி பூஜை ஏற்பவளே
பரிபூர்ண அழகை உடையவளே (972)

பரிசுத்த மனதை உடையவளே
பிந்து தர்பணத்தில் மகிழ்பவளே
அனைத்துக்கும் முன்னர் வந்தவளே
அனைத்துலகாளும் அம்பிகையே (976)

தசமுத்ரை பூஜை கொள்பவளே
த்ரிபுரா ஸ்ரீ வணங்கும் திருவே
ஞான முத்ரை வடிவானவளே
ஞானத்தால் அடையத்தக்கவளே (980)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**சிந்துபைரவி**

ஞான நேயமாய் இருப்பவளே
யோனிமுத்ரை வடிவானவளே
த்ரிகண்ட முத்ரைக்கு ஈஶ்வரியே
முக்குண வடிவினள் ஆனவளே (984)

முக்குணத்திற்கும் அம்பாளே
முக்கோண ரூபம் கொண்டவளே
பாவம் அணுகாத பராபரையே
பார்த்து வியக்கும் தன்மையளவளே (988)

கோரிய பொருட்களை கொடுப்பவளே
பயிற்சியால் அறியப்படுபவளே
அறுமார்க்கத்தையும் கடந்தவளே
பக்ஷபாதமின்றி அருள்பவளே (992)

அறியாமை இருளை அழிப்பவளே
அறிவிலா இடையருக்கும் தெரிபவளே
ஸ்ரீ கட்டளைகளின் பிறப்பிடமே
ஸ்ரீ சக்ரம்தனில் வசிப்பவளே (996)

ஸ்ரீமதி திரிபுர ஸுந்தரியே
ஸ்ரீசிவை எனும் பெயர்பெற்றவளே
சிவசக்தி வடிவம் ஆனவளே
ஸ்ரீ லலிதாம்பிகையும் அவளே (1000)

**லலிதாவின் நாமம் பாடிடுவோம்**

**லலிதாவின் பாதம் பணிந்திடுவோம்**

**பலஸ்ருதி**

ஸ்ரீ லலிதா தேவியின் ஆயிரம் நாமங்களை
சிந்தை ஒருமித்து நாளும் ஜபிப்பவர்
சிறந்த அருள் பொருள் ஆன்மீக ஞானம் பெற்று
சீரடியாம் அவள் திருவடி சேர்வரே

## பிழை பொறுத்தருள் பதிகம்

*சொற்குற்றம் பொருட்குற்றம் புணர்க்குற்றம் இவை பொறுத்து*
*சொல் எண்ணம் செயலால் யாம் செய்த பிழை பொறுத்து*
*திக்கெட்டும் புகழுடைய திரிபுரையாம் உன்நிழலில்*
*திகட்டாத பேரின்ப நிலை தருவாய் எனப் பணிந்தோம்.*



## " Dedicated to Sri Kamakshi - The Goddess of Kanchi"

The proceeds from this book is dedicated towards gow seva aimed at Indian native cow conservation and causes that support cancer prevention, palliative care and treatment.




The book "A call to God - Music Therapy for Evolution ", saw its physical release at an auspicious gathering of eminent musicians at 26th Sathya Sai Sangeethothsavam, Vaikom, 23Nov2016. The book speaks on the author's experiences while uncovering the process of Swara samyoga, a music therapy based kriya yogic process, that aims to promote health and wellness. Workshops are being conducted in regular intervals to share this process with interested spiritual aspirants, healers and people seeking healing. The book gives an overall view on fundamentals of music therapy, methodology for implemeting in various therapeutic environments and interesting life experiences of the author while doing her research.

Visit https://notionpress.com/read/a-call-to-god

## எம்முடன் இணைந்து நற்பணியாற்றும் நிறுவனங்கள்

1. **சாய் மதுரா ஸ்கூல் ஆஃப் மியூசிக், மந்தவெளிப்பாக்கம்**

**Carnatic Classical Vocal & Violin**

- Devotional - Thevaram, Divyaprabandam, Thiruppugazh, Vel Maaral, Panniru Thirumurai Purandaradasar, Annamachariyar, Badrachala Ramadasar and other composers taught.
- Also training given for AIR grade, BA and MA music for various Universities, both music and theory

Directors
Dr. M.A. Bhageerathi
Dr. Parur Harini Srivatsa
Contact number : +91 9840894883

2. **Sri Matha Creations - Srigan Eco earth products**

Media content creation, Artistic collaboration for marriage events (Oonjal songs, kutcheri, kolams and special dolls and curating gifts), incubation and marketing consultants for self help groups.

+91 9495208674

3. **Sri Research Institute of Holistic Healthcare and Self development**

Courses and workshops on Music therapy , yoga , Integrative healthcare and healing. : +91'9013905992

4. **"The Rotary Cancer and Research Foundation, (RCRF)**

A Charitable Trust to help the economically weak to conquer cancer. Established in 1995, the RCRF offers supports in diagnosis, treatment, post treatment supports, including general wellness support.

Phone: 7550133992 | Email: rotarycancercare@yahoo.com

முனைவர் திருமதி இரா அருணா ஸ்ரீ, 1974ஆம் ஆண்டு சென்னையில் பிறந்து, மதுரையில் இன்ஜினியரிங் படித்து



விமானப்படையில் அதிகாரியாகப் பணிபுரிந்தவர். சித்தூர் இசை பரம்பரையில் வந்ததால் இசை மீது ஆர்வம் மிகுந்து தமிழிசையில் முதுகலைப் பட்டமும் பெற்று, இசை சிகிச்சைக்கு வரைமுறை அமைத்து டாக்டர் பட்டமும் பெற்றவர். பனாரஸ் கரானாவில் ஹிந்துஸ்தானி இசையில் தேர்ச்சி பெற்று, Bade Ramdas Academy of Arts, Music and Indian culture என்ற நிறுவனத்தின் மூலம் இசைத் தொண்டாற்றி வருகிறார். இசை சிகிச்சையில் '' ஸ்வர ஸம்யோகம்'' என்ற முறையை வகுத்து Sri Research Institute of Holistic Healthcare and Self Development மூலம் இசை சிகிச்சையை அறிவியல் ஆய்வு முறையில் நடைமுறை படுத்த ஆர்வம் காட்டுபவர்களுக்கு கற்பித்தும் வருகிறார்.

NAMAMADHURAM








 For reviews  Youtube version